ஸ்ரீ

குருபரப்ரம்மணே நம:

# கேநோபநிஷத் தீபிகை.

---

𑌓𑌂॥ 𑌯𑍋𑌽𑌸𑍌 𑌸𑌰𑍍𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃
𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌕𑌃।
𑌶𑍁𑌦𑍍𑌧𑍋 𑌬𑍋𑌧𑌾𑌮𑍍𑌬𑍁𑌧𑌿𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌸𑍋𑌽𑌹𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑍋𑌽𑌵𑍍𑌯𑌯𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃॥ ௧॥

ஓம் ॥ யோஅஸௌ ஸர்வேஶ்வரோ விஷ்ணு:
ஸர்வாத்மா ஸர்வ தர்ஶக:।
சுத்தோ போதாம்புதி ஸ்ஸாக்ஷாத்
ஸோஹம் நித்யோஅபயப்ரபு:॥ ௧।

𑌅𑌸𑍍𑌤𑌿 𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌜𑌗𑌦𑍍𑌯𑍋 𑌹𑌿 𑌦𑍇𑌵 𑌇𑌤𑍍𑌥𑌂 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌵𑌿𑌭𑍁𑌃।
𑌯𑍋 𑌮𑌨𑌃𑌕𑌾𑌰𑌣𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌪𑍍𑌰𑍇𑌰𑌕𑌃 𑌪𑍃𑌥𑌗𑍍𑌦𑍃𑌷𑍍𑌟𑌤𑌾॥ ௨॥

அஸ்தி ஸாக்ஷீ ஜகத் யோஹி: தேவ இத்த ஸ்வயம் விபு:।
யோமந: காரணதீநாம் ப்ரேரக: ப்ருக த்ருஷ்டதா। ௨॥

𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌾𑌦𑍇𑌰𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌨𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌵𑌾𑌗𑌾𑌦𑍍𑌯𑌗𑍋𑌚𑌰𑌮𑍍।
𑌸𑍍𑌵𑌤𑍋𑌽𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌭𑌵𑌾𑌮𑌿 𑌤𑌤𑍍॥

யச்ச்ரோ த்ராதே ரதிஷ்டாநம் சக்ஷுர் வாகா த்யகோசரம்।
ஸ்வதோ த்யக்ஷம் பரம்பிர்ம்ம நித்யமுக்தம பவாமிதத்॥ ௩॥

[illegible]

[illegible] ௪॥

ப்ரயத்நா த்யன்தரேணைவ மநஆதேஃ ப்ரவர்தகம்।
விதிதா விதிதா ந்யத்வ ஸித்தம் ப்ரம்மாஹ மத்வயம்॥ ௪॥

[illegible]

[illegible] ௫॥

சத்யகாம ஸ்வயம் ஸித்தஃ ஸர்வேஶோ ய ஸ்வஶக்திதஃ।
ஸயேவான்தஃ ப்ரவிஷ்டோஹ முபாஸ்ய ஸ்ஸர்வ தேஹிநாம்॥

[illegible]

[illegible] ௬

வ்யாஸம் ஶங்கர யோகீந்தரம் ப்ரணம்யா ந்யாந் குரூநபி।
வ்யாக்யாயதே மயா ஸம்யக் கேநேஷித ப்ரதீபிகா॥ ௬॥

1. எவன் ஸர்வேச்சுரனாகவும் ஸர்வவியாபியாகவும் ஸர்வாத்மனாகவும் ஸர்வஸ்வரூபனாகவும் சுத்தனாகவும் ஞானசமுத்திரத்தில் பிரத்தியக்ஷனாகியுமிருக்கின்றானோ? அவனையே, "அஹம்" சப்த லக்ஷியார்த்தமான நித்தியனென்றும், பயமற்றவனென்றும், சகலத்திற்கும் ஏஜமானனென்றும் தெரிந்து, பூஜிக்கவேண்டியதெனில், அப்பேர்க்கொத்த வஸ்துவே நான். (அஹம்பிர்ம்மாஸ்மி) என்று நிரந்தரம் தியானஞ்செய்யக்கடவேன்.

2. எவன் எப்பொழுது மிருக்கிறவனாயும் எல்லாப் பிரவர்த்தி நிவர்த்திகளுக்குஞ் சாக்ஷியாயும்,

சகல ஜகத்தும் பிறப்பதற்கு ஸ்தானமாயும், (எல்லாவற்றையும் பகவதர்ப்பணஞ் செய்யுந் தன்மையென்ற வைராக்கியத்தையுடைய) இந்திரிய முதலானவைகளை யடைந்திருப்பவனால் அடையக்கூடியவனாயும், அந்நியசாதனங்களற்ற விபுவாயும், அந்தக்கரணமுதலானவைகளை பிரேரிக்கின்றவனாகவுமிருக்கின்றானோ? அவன், ஸ்வாநுபவத்தினாலேயே அடையத்தக்கவனென்று தெரிந்துகொள்ளக்கடவேன்.

3. எவன் சுரோத்திரம் முதலானவைகளுக்கு அதிஷ்டானமாயும், பார்வை வார்த்தை முதலானவைகளால் அறியமுடியாதவனாயும், ஸ்வயமாகவே எல்லாவற்றிற்கும் ஆதிபூதனாயும், பரப்பிர்ம்ம ஸ்வரூபனாயுமிருப்பவனோ? அவனே நித்திய முக்த ஸ்வரூபனென்று தெரிந்துகொள்ளக்கடவேன்.

4. எவன் மனதுமுதலியவைகள் பிரவர்த்திக்கிறதற்கு அந்தர்யாமியாகவும், அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் வேறாகவும், ஞான அஞ்ஞான காலங்களிலிருப்பவனாகவும், இரண்டற்றவனாகவுமிருக்கிறானோ? அவன் "அஹம்" சப்த லக்ஷியார்த்தனை பிர்ம்மஸ்வரூபனென்று தெரிந்துகொள்ளக்கடவன். (எனில், அவனே நான் என்று தெரிந்துகொள்ளவேண்டுமென்பது.)

5. எவன் கோரிக்கைகளற்றவனும், தானாகவிருக்கிறவனும், சகலமும் நியமிக்கிறவனும், பிராணுடைய

உதவியை எதிர்பாராதவனும், என்னுள் அந்தர் யாமியாகவும், யாவராலும் உபாஸனைசெய்யத் தகுந்தவனுகவுமிருக்கிருனே? அவனையே ஆத்மாவென்று தெரிந்துகொள்ளக்கடவேன்.

6. "வியாஸோநாராயணோஹரிः" என்று சொல்லப் படும் ஸ்ரீமந்நாராயண ஸ்வரூபரான வியாஸபகவானையும், "சங்கரசங்கரஸ்ஸாக்ஷாத்" என்று சொல்லப்படும் மகாபுருஷரையும், பிர்ம்ம வித்தையிலேயே காலங்கழிக்கும் இதரமகான்களேயும் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து "கேனோபநிஷத்தீபிகை" என்ற இத்தமிழ் வியாக்கியானத்தைப் பிரசுரஞ்செய்ய ஆரம்பிக்கின்றனன்.

## அவதாரிகை.

ஸாமவேதத்தின் முதலாவது அத்தியாயம் முதற் கொண்டு எட்டாவது அத்தியாயம் வரைக்கும் கர்மாநுஷ்டானம் அவசியம் செய்யவேண்டுமென்று, அதற்கு அநேக உப பத்திகளைச் சொல்லியபிறகு, மோக்ஷத்தைக் கோருகிறவர்கள் கிருதார்த்தர்களாகிறதற்காக பிர்ம்மவித்தைக்குச் சாதனமான வழியைத் தெரிவிப்பதற்கு இந்தக் கேனோபநிஷத் என்ற, எட்டாவது அத்தியாயம் பிறந்தது. ஆகையால் இவ்வுபநிஷத்திற்கு "கேனோபநிஷத்" என்றும், இது ஸாமவேதத்தின் எட்டாவது அத்தியாயத்திலிருக்கிறதென்றும், தெரிந்துகொள்ளக்கடவர்.

இவ்விதமாய் ஒவ்வொரு வேதமும் ஆரம்பத்தில் கர்ம விஷயத்தையும், அப்படிப்பட்ட கர்ம்மங்களை

பகவதர்ப்பணமாகச்செய்து அதனுல் சித்தசுத்தியை யுடைந்திருக்கிறவர்களுக் குபயோகமான ஆத்ம விஷயத்தையும், (பிர்ம்மவிஷயத்தை) தெரியப்படுத்துகிறதாகவிருக்க; ஆத்மவிசாரணை யற்றவர்களும் விஷய இச்சை யுடையவர்களுமான மூன்றுவித பாமரர்கள், (அவிவேகிகள்) சித்தசுத்தி யுண்டாகிறதற்குச் சாதனமான நிஷ்காம கர்ம்மத்தைச் செய்யவேண்டியதென்று விதிக்கிற வேதத்தின் (உபநிஷத்தின்) முதல் பாகத்தின் யதார்த்தத்தைத் தெரிந்துகொள்ளாமல் இது நல்லது இது கெட்டது; இது தர்ம்மம் இது அதர்ம்மம்; என்று தெரிந்துகொள்ளுவதற்கு அவகாசமில்லாத மூடர்களாய் ஆகாரம், நித்திரை, பயம், மைதுனங்களை மாத்திரஞ் செய்துகொண் டிருக்கும் பசுக்களைப்போல அவிவேகத்தை யடைந்து கர்ம்மங்களை பலாபேக்ஷையுடன்செய்து தென்திசை மார்க்கமாக (பிறப்பிறப்புள்ள வழியாக) நடப்பதற்கு பிரயத்தனப்பட்டு மிகவும் இழிவான கதியை அடைகின்றூர்கள்.

மூவித பாமரர்களாவார்:—

1. கர்மமே முக்கியமென்றும் கர்மத்தைப் பார்க்கிலும் சிரேஷ்டமானது மற்றொன் றில்லையென்றும் நினைப்பவர்களான முதல்வகுப்பினைச் சேர்ந்தவர்கள், பலன்களில் அபேக்ஷையுடையவர்களாகி வேதாந்தம் ஞானம் முதலான வார்த்தைகளையாகிலும் அல்லது அவைகளைக்குறித்த உபந்நியாஸத்தை யாகிலும் கேட்க நேரிட்ட பொழுதும் அவைகள் தங்களுடைய செவிக

ளுக்கு நாராசம்போல நினைத்து வருத்தமடைந்து ஒதுங்குபவர்களாகிறார்கள்.

2. கர்மமே முக்கியமென்றும் கர்மத்தைப் பார்க்கிலும் வேறே சிரேஷ்டமான தில்லையென்றும் வாக்கினால் மாத்திரம் சொல்லிக்கொண் டிருப்பவர்கள் இரண்டாவது வகுப்பிற் சேர்ந்தவர்கள். இவர்கள் தங்களைப் பெரியோர்களென்று பிறர் எண்ணக்கூடியதாய் நடித்து, வாக்கு சாதுர்யமான வசனங்களைமாத்திரஞ்சொல்லி, சொன்னபடி தாங்கள் லேசமேனும் அநுஷ்டானத்திற்குக்கொண்டுவராமல் அன்னியர்கள் பிரமிக்கும்படிப் பேசி, அதன்மூலமாய்த் திரவியார்ஜனைசெய்து, அவர்களால் புகழப்பட வேண்டுமென்ற எண்ணத்துடன் அவர்கள் எதிரில் மகா கர்மாநுஷ்டான முடையவர்களைப்போல நடித்து, அவர்களில்லாதபோது அப்படிப்பட்ட அநுஷ்டானக் கிரமங்கள் ஒன்றுஞ் செய்யாமலும் தங்கள் மனதில் கர்மத்தின்பேரில் கொஞ்சமும் விசுவாசமும் நம்பிக்கையும் அற்றவர்களாக இருக்கிறவர்களாகிறார்கள்.

3. இனி மூன்றாவதாவார் யாவரெனில், கர்மமே முக்கியமென்றும், கர்மத்திலும் உயர்ந்தது ஒன்றுமில்லையென்றும், வாக்கினால்மாத்திரஞ் சொல்லி "விச்வதோமுகம்" முதலான பெரிய கர்மத்தைச்செய்ய சங்கல்பித்து இருக்கிறோமென்று அநேக தேசாடனங்கள்செய்து, அங்கங்கே

திரவியஞ் சம்பாதித்து, கர்மத்தில் நிஜ மான சிரத்தையும் நம்பிக்கையு மில்லாமலிரு க்கையால், சம்பாதித்த திரவியத்தைக் கலியா ணம் முதலிய குடும்பச் செலவிலும் மற்றையவ ழியிலுஞ் செலவிட்டுத் திருடர்களால் வழிபறிக் கப்பட்டதென்று அவதூறு வார்த்தைகளைக் கற் பித்து, எல்லோரும் நம்பும்படி பாசாங்குசெய் து, திரவியம் நஷ்டமாகி விட்டதினால் அக்கர்மம் நடத்தமுடியாமற் போயிற்றென்று சொல்லி, அத்திரவ்யங்களைத் தனக்கிஷ்டமான கெட்டவ ழியில் உபயோகித்து, பிரஷ்டர்களாய்க் கெட்டு ப்போகிறவர்கள். இவர்களெல்லோரும் இவ்வுல கத்தில் மிகவும் இழிவான கெதியை அடைவா ர்களேயன்றி எப்பொழுதாகிலும் நன்மையை யடையார்கள்.

இவ்விதமாகக் கர்மாசரணைசெய்யாமல், கர்மங்களை பகவதர்ப்பணமாகச்செய்து சித்தசுத்தியை யடைந் திருக்கிறவர்கள், பூர்வஜன்மாந்திரத்தில் செய்த சுகிர் தங்களாலும் இச்சென்மத்தில் செய்த நிஷ்காம கர்ம ங்களினாலும் சுத்த சித்தர்களாகி அதனால் வைராக்கி யத்தை யடைந்து பகவத் விசாரணையில் (ஆத்ம விசா ரணையில்) மிகவும் அபிலாசை யுடையவர்களாகி பக வத் விஷயமாக விசாரணை செய்யப் பிரவர்த்திப்பார் கள்:

இதைக்குறித்து சுருதியில் சொல்லுகிறதாவது.

ஶ்ரு॥ பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூ:

தஸ்மாத் பராங் பஶ்யதி நாந்தராத்மந்।

𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌧𑍀𑌰𑌃 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍈𑌕𑍍𑌷𑌤𑍍

𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌨𑍍॥

(𑌕𑌠𑍋. ச. உ, 𑌵𑌲𑍍𑌲𑍀. ச. 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂-க.)

சுருதி || பராஞ்சிகாநி வ்யத்ருநத் ஸ்வயம்பூஃ
தஸ்மாத் பராங் பச்யதி நாந்தராத்மன்|
கஸ்சித்தீரஃ ப்ரத்யகாத்மான மைக்ஷத்
ஆவ்ருத்த சக்ஷு ரம்ருதத்துவ மிச்சன் ||

(கடோ. அ. உ, வல்லி, ச. வாக்கியம்-க.)

(இ - ள்.) உலக விஷயங்களி லாசையையுடைய இந்திரியங்களைப்பெற்ற மோக்ஷாபேக்ஷையையுடையவர்கள் அந்தரியாமியான பகவத்ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள மாட்டார்கள். மோக்ஷத்தை அபேக்ஷிக்கிற ஆயிரம்பேர்களி லொருவன், உலக விஷயங்களில் ஓடுகிற இந்திரியங்களைச் சுவாதீனப்படுத்திக்கொண்டு, மனோ நிக்கிரகத்தைப் பெற்று அந்தரியாமியா யிருக்கிற பகவத்ஸ்வரூபத்தை (ஆத்மஸ்வரூபத்தை) சுவாநுபவத்தினால் அடைவன் என்றும்:—

𑌶𑍍𑌰𑍁॥ 𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍𑌕𑌰𑍍𑌮𑌚𑌿𑌤𑌾𑌨𑍍𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑍋

𑌨𑌿𑌰𑍍𑌵𑍇𑌦𑌮𑌾𑌯𑌾𑌨𑍍𑌨𑌾𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌃 𑌕𑍃𑌤𑍇𑌨।

𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌰𑍍𑌥𑌂𑌸𑌗𑍁𑌰𑍁𑌮𑍇𑌵𑌾𑌭𑌿𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍

𑌸𑌮𑌿𑌤𑍍𑌪𑌾𑌣𑌿𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌿𑌯𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌮𑍍॥

(𑌮𑍁𑌣𑍍𑌡𑌕-க, 𑌖𑌣𑍍𑌡𑌂-உ, 𑌵𑌾𑌕𑍍𑌯𑌂-கஉ.)

சுருதி || பரீக்ஷ்யலோகான் கர்மசிதான் ப்ராம்மணோ
நிர்வேதமாயா ந்நாஸ்த்யக்ருதஃ க்ருதேந|
தத்விஞ்ஞா னார்த்தம் ஸகுருமேவாபிகச்சேத்
ஸமித்பாணி ஃஸ்ரோத்ரியம் ப்ரம்ம நிஷ்டம்||

(முண்டக-க, கண்டம், உ, வாக்யம்-கஉ.)

(இ-ள்.) யாகம் முதலான கர்மங்களைச்செய்து சம்பாதிக்கப்படும் புண்ணியலோகங்களைப்பற்றிச் சாஸ்திரத்தினாலும் பெரியோர்களாலுந் தெரிந்து, மிகுந்த ஆசையுடன் பலத்தைக் கோரிச்செய்த எல்லாக் கர்மங்களின் பலனானது புனர்ஜன்மமே என்று தெரிந்து, வைராக்கியத்தை யடைந்து, புனர்ஜன்மமற்ற ஸ்திதியை யடைவதற்கு முக்கியசாதனமான ஞானத்தை யடையவேண்டித், தான் எல்லாச் சாஸ்திரங்களையும் படித்த பண்டிதனானாலும் குருவில்லாமல் பிர்ம்மஞானத்தை யடைவது மிகுந்த துர்லபமாகையால், அவித்தையைப் போக்கடிக்கத்தகுந்த சத்குருவை யடையத்தகுந்தவிதமாய் அடைந்து, அவரைச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, அவருடைய வாக்குக்கு இரண்டுசொல்லாமல் குருகுலவாசம் செய்யவேண்டியது.

[illegible]

சுருதி|| தத்ரகோமோஹஃகச்சோகஃ||

(இ-ள்.) அப்படிப்பட்டவர்களுக்கு சோகமோகங்கள் ஏது? (இல்லை என்றபடி.)

[illegible]

சுருதி || பித்யதே ஹ்ருதயக்ரந்தி
ஸ்சித்யன்தெ ஸர்வஸம்சயாஃ।
க்ஷீயன்தேசாஸ்ய கர்மாணி
தஸ்தந் திருஷ்டே பராவரே||
(முண்ட. உ, கண். உ, வா. கூ)

(இ - ள்.) (அப்படிப்பட்டவர்கள்) குருப்தேச பூர்வமாய் அநுஷ்டிக்கிறவர்கள் ஹிருதயத்திலிருக்கும் மலினங்களைத் துடைத்துவிடுபவர்கள், சகல் சமுசயங்களையும் வெட்டித்தள்ளுபவர்கள், அனேக ஜன்மங்களாய்த் தொடர்ந்து வருகிற தங்களுடைய கர்மபலன்களை நசிக்கச்செய்துவிடுபவர்கள்.

அப்பேர்க்கொத்த நிஷ்காம கர்மாநுஷ்டானத்தையுடையவன்:—

𑌶𑍍𑌲𑍋॥ 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌸𑍁𑌤𑌂 𑌵𑌿𑌤𑍍𑌤𑌂
𑌭𑍍𑌰𑌾𑌤𑌰𑌂 𑌮𑍋𑌹𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌣𑌮𑍍।
𑌆𑌶𑌾𑌪𑌤𑍍𑌨𑍀𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌦𑍍𑌯𑌾𑌵𑌤𑍍
𑌤𑌾𑌵𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑍋 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃॥

சுலோகம் || அஹங்கார ஸுதம்வித்தம்
ப்ராதரம் மோஹிமந்திரம்|
ஆசாபத்நீம் த்யஜேத்யாவத்
தாவந்முக்தோ நஸம்சயஃ||

(இ-ள்.) சந்நியாசத்தையடையக் கோருபவன் வித்தேஷணை, புத்திரேஷணை, தாரேஷணை என்ற ஈஷணைத்திரயங்களையுமெப்படிவிடவேண்டுமோ? அப்படியே நிஷ்காம கர்மம் செய்பவனும், அகங்காரமென்கிற புத்திரனையும், மோகமென்கிற வித்தத்தையையும் பந்துக்களையும், ஆசை என்கிற பத்தினியையும் அவசியம் விடவேண்டியவனாகிறான். அப்படி விடாதபேர்களுக்கு நிஷ்காம கர்மாநுஷ்டானமானது சித்திக்கமாட்டாது. ஆகையால், பிர்ம்மஞானத்தை மேற்சொன்ன நிஷ்காம கர்மாநுஷ்டானமுடைய, வைராக்கியர்கள் குருபதேசத்தினால் அடையக்கூடுவாரேயன்றித், தர்க்கமுதலாயின கற்ற பண்டிதத் தன்மையாலும், சதாவதானம் ஸஹஸ்ராவதானம் முதலியவைகளாலும் அடையமுடியாதென்ப

தைத் தெரிவிப்பதற்காக, வினாவிடைகளையுடைய இந்தக் கேநோபநிஷத்தானது ஆரம்பிக்கப்படுகிறது.

ஆகையால் மோக்ஷாபேக்ஷையையுடைய * சாதந சதுஷ்டயத்தை யடைந்திருக்கிறவர்கள்:—

𑌶𑍍𑌲𑍋॥ 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌾𑌤𑍇𑌨
𑌪𑌰𑌿𑌪𑍍𑌰𑌶𑍍𑌨𑍇𑌨 𑌸𑍇𑌵𑌯𑌾।
𑌉𑌪𑌦𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂
𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃॥
𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾. 𑌅-௪. 𑌶𑍍𑌲𑍋-௩௪

சுலோகம்॥ தத்வித்தி ப்ரணிபாதேந
பரிப்ரச்நேந ஸேவயா।
உபதேக்ஷ்யந்தி தேஞானம்
ஞாநிந ஸ்தத்வ தர்சிந:॥
(பகவத்கீதை. அத். ௪. சு. ௩௪.)

(இ-ள்.) சத்குருவி னிடத்திற்குப்போய் சாஷ்டாங்க நமஸ்காரங்களைச்செய்து பந்தமென்றால் என்ன? மோக்ஷமென்றாலென்ன? வித்தை என்பதெது? என்கிற இப்போக்கொத்த தத்துவவிசாரணை குருமுகமாய்ச் செய்து, அவர் ஆஞ்ஞையின் பிரகாரம் நடந்துவரும் பக்ஷத்தில் அந்தமகான் உனக்கு ஞானயோகப்பிரகரணத்தை உபதேசிப்பார்.

என்று கீதாவசனமிருக்கிறபடியால் சத்குருவை யடைந்து தத்துவிசாரணை செய்யவேண்டிய தவசியம். அப்படிப்பட்ட விசாரணையானது மூன்றுவிதமானது, அவையாவன:—

* சாதந சதுஷ்டய விவரத்தை இவ்வியாக்கியான கர்த்தாவால் ரசிக்கப்பட்டிருக்கிற ஈசாவாஸ்யோபநிஷத் டீகையின் ௪-வது பக்கத்தில் பார்க்க.

(1) வாதம். (2) ஜல்பம். (3) விதண்டாவாதம்.

1. இராகத் துவேஷங்களற்றுத் தத்துவநிச்சயத்திற்காக, குருவும் சிஷ்யனும் செய்யும் சங்கோத்தரங்களே, வாதம் எனப்படும்.

2. சாஸ்திரங்களினாலும் யுக்தியினாலும் பிறரை ஜயிக்கவேண்டுமென்று, அகங்கார மமகாரத்துடன் செய்யப்படும் சங்கோத்தரங்கள், ஜல்பம் எனப்படும்.

3. சாஸ்திரத்திற்கும் யுக்திக்கும் இசையாமல், பிறரைப்பேசவொட்டாமல், அல்லது அவர் சொல்லிக்கொண்டு வரும்போதே தானும் உறத்த சப்தத்தினால் அவர்களுடைய வார்த்தைகளையும் கவனிக்காமல், தனக்குத்தோன்றினவாறு பூமியதிரும்படி பொருந்தாச்சொற்களால் இரைந்து கூவி, கெலித்து விட்டதாய்த் தானே பிரசுரப்படுத்திக்கொள்வது, விதண்டாவாதம் எனப்படும்.

இம் மூவிதங்களில் முதற்கூறிய வாதமே முமுக்ஷுக்களான சீடர்கள் அநுஷ்டிக்கத்தகுந்தது. அப்படிப்பட்ட குரு சிஷ்ய வசன பிரதிவசன ரூபமானது அடியில் வரும் கேநோபநிஷத்தென்று தெரிந்து கொள்ளக்கடவர்.

உபநிஷச்சாந்தி:

ஆப்யாயந்து மமாங்காநி வாக் ப்ராண: சக்ஷு:
ஶ்ரோத்ரமதோ பலமிந்த்ரியாணி ச ஸர்வாணி। ஸர்வம்
ப்ரஹ்மௌபநிஷதம் மாஹம் ப்ரஹ்ம நிராகு

𑌮𑌾𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑍋𑌦𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌮𑌸𑍍𑌤𑍁।
𑌅𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌮𑍇𑌽𑌸𑍍𑌤𑍁 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌨𑌿𑌰𑌤𑍇
𑌯 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌧𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌤𑍁॥

𑌓𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃. 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃. 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃.

ஓம் ‖ ஆப்யாயந்து மமாங்காணி வாக்ப்ராண ஸ்சக்ஷு
ச்ரோத்ர மதோபல மிந்திரியாணிச ஸர்வாணி।
ஸர்வம் ப்ரம்மோபநிஷதம்
மாஹம் ப்ரம்மே நிராகுர்யாம்
மாமபிர்ம்ம நிராக்ரோ தநிராக்ரணமஸ்து।
அநிராகரணமேஅஸ்து ததாத்மநிரதே
யஉபநிஷத்ஸு தர்மமா ஸ்தே
மைஸந்து தேமைஸந்து‖

ஓம் சாந்திஃ - சாந்திஃ - சாந்திஃ‖

(இ - ள்.) ஓ பகவானே! சகலமும் உம்முடைய வியாபகமேயாகையால் உபஸமனத்தை என்னுடைய சரீரமானது யடையக்கடவது; வாக்கு, பிராணன், கண், செவி, கை முதலிய சகல இந்திரியங்களும் உபஸமனத்தை யடைக்கடவன. நான் உம்மை நிராதரணை செய்யாமலிருக்கக்கடவன். பரப்பிர்ம்ம ஸ்வரூபியாகிய நீரும் என்னை நிராதரணை செய்ய வேண்டாம். நான் பேதபுத்தியினுல் உம்மை வேருக்கி விலக்காமலிருக்கும்படி என்னைச் செய்யவும். பரப்பிர்ம்ம ஸ்வரூபியாகிய நீரும் என்னை விலக்கவேண்டாம். உம்மிடத்திலிருக்கிற உபநிஷத்தின் தர்மங்களெல்லாம் என்னிடத்திலுமிருக்கவேண்டும் அவைகளெல்லாம் என்னையே அடையக்கடவன.

ஓம் சாந்தி - சாந்தி - சாந்தி.

---

## முதலாவதுகண்டம்.

### முதலாவதுமந்திரம்.

𑌹𑌰𑌿𑌃 𑌓𑌂॥

𑌶𑍍𑌰𑍁॥ 𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌂 𑌪𑌤𑌤𑌿 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂 𑌮𑌨𑌃
𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃।
𑌕𑍇𑌨𑍇𑌷𑌿𑌤𑌾𑌂 𑌵𑌾𑌚𑌮𑌿𑌮𑌾𑌂 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃
𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌕 𑌉 𑌦𑍇𑌵𑍋 𑌯𑍁𑌨𑌕𑍍𑌤𑌿॥ க॥

சுருதி ॥ கேநேஷிதம் பததி ப்ரேஷிதம் மந:
கேந ப்ராண: ப்ரதம: ப்ரைதியுக்த:।
கேநேஷிதாம் வாசமிமாம் வதந்தி சக்ஷு:
ச்ரோத்ரம் க உ தேவோ யுநக்தி. (க)

| அந்வயம் | அர்த்தம் |
|---|---|
| 𑌮𑌨𑌃<br>மந: | (சங்கல்ப விகல்பங்களை யுடையதும், ஞானசக்தியை யுடையதுமான) மனதானது |
| 𑌕𑍇𑌨 (𑌕𑍇𑌨𑌵𑌾)<br>கேந (கேநவா) | யாராலே (அசேதனத்தினாலேயா? அல்லது சேதநனாலேயா?) |
| 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌂 (𑌵𑌸)<br>ப்ரேஷிதம் (ஸத்) | தூண்டப்பட்டு, (ஏவப்பட்டு) |
| 𑌈𑌷𑌿𑌤𑌂<br>ஈஷிதம் | தனக்கிஷ்டமான விஷயத்தைக் குறித்து |

| | |
|---|---|
| 𑌪𑌤𑌤𑌿<br>பததி | பிரவர்த்திக்கின்றது? (அல்லதுசெல்லு கின்றது?) |
| 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃<br>ப்ரதம꞉ | முக்கியமான (முதன்மையான) (சக லேந்திரிய விருத்திகளுக்கும் பூர்வ மானதால்) |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃<br>ப்ராண꞉ | (ஐந்து விருத்திகளையுடைய) பிராண னைது |
| 𑌕𑍇𑌨<br>கேந | யாராலே |
| 𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 (𑌸𑌨𑍍)<br>யுக்த꞉ (ஸந்) | ஏவப்பட்டதாய் (நியமிக்கப் பட்ட தாய்) |
| 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿<br>ப்ரைதி | (தனக்கு இயற்கையான சொரூபமாகி ற மேல்சுவாச கீழ்சுவாசரூபமாய்ச்) செல்லுகிறது. (என்றால், சஞ்சரிக் கிறது?) |
| 𑌕𑍇𑌨<br>கேந | யாராலே |
| 𑌇𑌷𑌿𑌤𑌾𑌂<br>ஈஷிதாம் | ஏவப்பட்டு, (நியமிக்கப்பட்டு) |
| 𑌇𑌮𑌾𑌂<br>இமாம் | இந்த சப்தலக்ஷணத்தை |
| 𑌵𑌾𑌚𑌂<br>வாசம் | (அநேக சப்தஜாலங்களுக்குக் காரண மான வாக்கேந்திரிய ரூபமாயுள்ள) வாக்கானது (வாக்கின்மூலமாய்) |

| | |
|---|---|
| (லௌகிகா:) | இந்தப் பிரவிருத்திமார்க்கத்திலிருக்கிற ஜனங்கள் |
| வத³ந்தி<br>வதந்தி | சொல்லுகிறார்கள் ? (பேசுகிறார்கள்) |
| சக்ஷூம்ஷி<br>சக்ஷூம்ஷி | கண்களையும் |
| ஶ்ரோத்ரம்<br>சுரோத்ரம் | காதுகளையும் |
| க உ தே³வ:<br>க உ தேவ: | எந்த ஸ்வயம்பிரகாச சொரூபமான தெய்வமானது |
| (ஸ்வே ஸ்வே விஷயே)<br>ஸ்வேஸ்வே விஷயே | (தந்தம்விஷயத்தில்) |
| யுநக்தி<br>யுநக்தி | பிரேரேபிக்கச்செய்கிறது? |

ஶ்ருதி|| "நைஷா தர்கேண மதிராபநேயா"
(கடோ. வல்லீ-உ. வா-கூ.)

சுருதி|| "நைஷா தர்கேணமதிராபநீயா"||
(கடோ-வல்லி-உ, வா-கூ.)

(இ-ள்.) இந்த பிர்ம்மவித்தையானது தர்க்கத்தினாலாவது அல்லது அவனவன் ஊகத்தினாலாவது அடையமுடியாது.

என்கிற சுருதியின் தாத்பரியத்தை நன்றாய் மன தில் கிரகித்து, சாஸ்திர வாஸனை முதலியவாஸனை களைத் தன்னிலிருந்து விலக்கி,

𑌶𑍍𑌲𑍋॥ 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍇𑌵 𑌤𑌤𑍍॥
𑌯𑌜𑍍𑌞𑍋 𑌦𑌾𑌨𑌂 𑌤𑌪𑌶𑍍𑌚𑍈𑌵 𑌪𑌾𑌵𑌨𑌾𑌨𑌿 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌾𑌮𑍍.
(𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾. 𑌅-௧௮. 𑌶𑍍𑌲𑍋-௫)

சுலோ ॥ யக்ஞதாநதப꞉கர்ம நத்யாஜ்யம் கார்யமேவதத்।
யக்ஞோதாநம் தபஸ்சைவ பாவநாநி மநீஷிணாம்॥
(பகவத்கீதை அத்-௧௮-சு-௫.)

(இ - ள்.) யாகம், தானம், தபசு முதலிய சத்கர்மங்களைச் செய்யாம லிருக்கக்கூடாது. அவைகளைப் பலாபேக்ஷை யின்றி ஈஸ்வரார்ப்பணபுத்தியுடன் செய்வதினால் சித்தசுத்தி யுண்டாகும்.

ஆகையால், சாஸ்திரத்தில் அந்தந்த வர்ணாச்சிரமங் களுக்கு ஏற்பட்டிருக்கிற கர்மங்களை பகவதர்ப்பண மாகச்செய்து, தன்னுடைய பாபங்களை நிவர்த்தித்துக் கொண்டு, சாதனசதுஷ்டய முடையவனாகிச் சித்தசுத் தியை யடைந்திருப்பவ னெவனோ? அவன்

𑌶𑍍𑌰𑍁॥ 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 𑌜𑌨𑍍𑌤𑍁𑌃 𑌵𑌿𑌦𑍍𑌯𑌯𑌾 𑌚 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍𑌤𑌿 𑌯𑌤𑌯𑌃 𑌪𑌾𑌰𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌃॥

சுருதி ॥ கர்மணாபத்யதேஜந்து꞉ வித்யயாச விமுச்யதே।
தஸ்மாத் கர்ம நகுர்வந்தி யதய꞉ பாரதர்சிந꞉॥

(இ - ள்.) பிராணிகளினுடைய காமிய கர்மாநுஷ்டானத் தினால் பிராணிகளுக்கு சம்சார பந்தங்களுண்டாகின்றன: நிஷ்காம கர்மாநுஷ்டானத்தினா லுண்டான ஞானத்தினால் பந்தமானது போய்விடுகின்றது. ஆகையால், மோக்ஷத்தை

யபேக்ஷிக்கிற சாதன சதுஷ்டயமுடையவர்கள் காமிய கர்மத்தில் இச்சையை வைக்கக்கூடாது என்றும்,

ஶ்லோ॥ ஸம்ஸாரமேவ நிஸ்ஸாரம்
த்ருஷ்ட்வா ஸாரதித்ருக்ஷயா।
ப்ரவ்ரஜந்த்யக்ருதோத்வாஹாஃ
பரம்வைராக்யமாச்ரிதாஃ॥

சுலோ ॥ ஸம்ஸாரமேவ நிஸ்ஸாரம்
த்ருஷ்ட்வா ஸாரதி த்ருக்ஷயா।
ப்ரவ்ரஜந்தியக் ருதோத்வாஹாஃ
பரம்வைராக்ய மாச்ரிதாஃ॥

(இ - ள்.) புத்திமான், ஸம்ஸாரத்தில் ஸாரமொன்றுமில்லையென்று நன்றாய்த் தெரிந்துகொண்டு ஸாரமாயுள்ள வஸ்துவைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்ற எண்ணத்துடன் ஸம்ஸாரத்தில் வைராக்கியத்தை யடைந்து, காமியகர்மத்தை இச்சியான் என்றும், சுருதி ஸ்மிருதிகள் கோஷிக்கின்றனவாகையால்,

அப்படிப்பட்ட வைராக்கியசாலி, பிர்ம்மஞானியாயும் தத்துவ வேத்தாவாயுமிருக்கிற சத்குருவையடைந்து சாஷ்டாங்க வந்தனங்கள் செய்து, அவருடைய வருத்தியின் பிரகாரம் குருகுல வாசஞ்செய்து, சுருதிவசனங்களின்பேரில் நம்பிக்கையும், குருவாக்கியத்தில் சிரத்தையும் பக்தியுமுடையவனாகி, அக்குருமுகமாய் முதலில் தத்துவவிசாரணை செய்யக்கடவன். எப்படியெனில், "ஓ சுவாமி! சங்கல்ப்ப விகல்பங்களோடு கூடிய மனதும், ஐந்து விருத்திகளையுடைய பிராணாதிவாயுக்களும் எவற்றால் (எனின், சேதனவஸ்துவினாலேயா? அல்லது, அசேதனவஸ்துவினாலேயா? பிரேரணை

செய்யப்பட்டு, பிரவிருத்தி மார்க்கமாயுள்ள தம்தம் விஷயங்களில் பிரவர்த்திக்கின்றன? அனேக ரூபத லக்ஷணங்களையுடைய வாக்கேந்திரியமானது யாரால் பிரேரணை செய்யப்பட்டு வசனக்கிரியைகளைச் செய்கிறது? கண்களையும், செவிகளையும் யார் பிரேரணை செய்து தந்தம் விஷயங்களில் நடத்துகின்றார்? என்று சீடன் குருவை வினவினன். என்பதை இந்த கேனோபநிஷத்தின் முதல்மந்திரம் தெரிவிக்கின்றது.

ஐந்து விருத்திகளையுடைய பிராணவாயுக்களாவன:

1. பிராணன்.
2. அபானன்.
3. வியானன்.
4. உதானன்.
5. சமானன்.

பிராணன். உச்வாஸ, நிச்வாஸ ரூபமாய், நாழிகை ஒன்றுக்கு (௩௬0) சுவாசங்களை இரவும் பகலும் விடுவிப்பது.

அபானன். குதத்தையும் குய்யத்தையும் பற்றி நின்று மலஜலாதிகளைக் கழிப்பிப்பது.

வியானன். சரீரத்தின் மேற்பக்கத்திலிருந்து ஸ்பர்சங்களை அறிவிப்பது.

உதானன். ஜாடராக்கினியை உண்டுபண்ணிச் சாப்பிட்ட பதார்த்தங்களின் ரசத்தை நாடி நரம்புகளிலே சேர்ப்பித்துச் சரீரத்தை வளர்ப்பிப்பது.

சமானன். எல்லாவாயுவையும் ஏறுதல் குறைதல் செய்யவொட்டாமல் சமனாய்க் கீழ்கொண்டியங்குவிப்பது.

## இரண்டாவது மந்திரம்.

அவதாரிகை.

* ஸாதனஸதுஷ்டய ஸம்பன்னனுகி வைராக்கியத்தை யடைந்து தத்துவத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று மிகுந்த ஆவலுடன் சத்குருவை யடைந்த சீடன், மேற்சொன்ன விஞக்களைக் கேட்க, குரு, சீடனுடைய யோக்கியதையைத் தெரிந்துகொண்டு சொல்லுகிறதாவது:—மனது, பிராணன், கண், செவிமுதலானவைகள் யாரால் பிரேரணை செய்யப்பட்டுத் தந்தம் விஷயத்தில் செல்லுகின்றன, என்றல்லவா கேட்டனை? அதற்குப் பிரத்தியுத்தரம் சொல்லப்போகிறதைச் சாவதனமாய்க்கேள் ; சீடனே! என்று,

2.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌮𑌨𑌸𑍋 𑌮𑌨𑍋
𑌯𑌦𑍍𑌵𑌾𑌚𑍋 𑌹𑌵𑌾𑌚𑌂 𑌸𑌉𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 ।
𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌤𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑌧𑍀𑌰𑌾𑌃 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯
𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌦𑌮𑍃𑌤𑌾𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ॥ (௨)

சுருதி | ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம்
மநஸோமநோ யத்வாசோஹவாசம்
ஸ உ ப்ராணஸ்ய ப்ராணஃ|
சக்ஷுஷஸ்சக்ஷு ரதிமுச்யதீராஃ
ப்ரேத்யாஸ்மால் லோகா தம்ருதா பவந்தி. |௨||

𑌯𑌤𑍍 (𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍) எந்தக்காரணத்திஞல்
யத் (யஸ்மாத்)

ஶ்ரோத்ரஸ்ய
ஸ்ரோத்ரஸ்ய — செவிக்கு

ஶ்ரோத்ரம்
ஸ்ரோத்ரம் — செவியாகவும், (எனில், சவத்திற்கும் செவிடனுக்கும், காதுகளிருந்த போதிலும் கேட்கிறதில்லை யென்பது பிரசித்தமல்லவா? ஆகையால், ஸ்தூலமாய்க் காணப்படுகிற செவியைக்காட்டிலும், சப்தங்களைக் கேட்கிறதற்குச் சாதனமாய் மற்றொரு வஸ்து வேண்டிய தவசியம் என்று நேரிடுகிறது. அப்படிப்பட்ட சூக்ஷ்ம பதார்த்தம் எதுவோ? அதுவே சுரோத்திரேந்திரிய மென்று சொல்லப்படும். அவ்விந்திரியம் ஜடமாகையால், சப்தங்களைக் கிரகிக்கிறதற்காகச் சேதனரூபமான ஒரு வஸ்துவினுடைய உதவி அவசியம் வேண்டியதாயிருக்கிறது. எந்தவஸ்துவானது ஜடமாக விருக்கிற சுரோத்திரேந்தியத்திற்குச் சப்தங்களைக்கேட்கும் தன்மையை உண்டு பண்ணுகிறதோ? அவ்வஸ்துவே, சுரோத்திரத்திற்குச் சுரோத்திரமெனப்படும்.)

(யஸ்மாத்)
யஸ்மாத் — எந்தக்காரணத்தினால்

| | |
|---|---|
| 𑌮𑌨𑌸𑌃<br>மநஸ: | மனதிற்கு |
| 𑌮𑌨𑌃<br>மந: | மனதாகவும், |
| 𑌵𑌾𑌚𑌃<br>வாச: | (ஜிஹ்வை முதலிய அஷ்டஸ்தானங்களையுடைய) வாக்கேந்திரியத்திற்கு |
| 𑌵𑌾𑌚𑌂<br>வாசம் | வாக்காகவும், |
| (𑌤𑌤𑍍)<br>(தத்) | அந்தக்காரணத்தினல் |
| 𑌸 𑌉<br>ஸ உ. | அதே (பிர்ம்மமானது) |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌸𑍍𑌯<br>ப்ராணஸ்ய | பிராணனுக்கு |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃<br>ப்ராண: | பிராணமாகவும், |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌃<br>சக்ஷுஷ: | கண்ணுக்கு |
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃<br>சக்ஷு: | கண்ணகவும், |
| 𑌧𑍀𑌰𑌾𑌃<br>தீரா: | (தங்களுடைய சகலேந்திரியங்களுக்கும் ஆதாரபூதனகவும் அந்தர்யா |

| | |
|---|---|
| | மியாகவும், சர்வபரிபூர்ணனுகவுமிருக்கிற வஸ்துவே பிர்மமென்று (பகவானென்று) சுவாநுபவத்தால் தெரிந்துகொண்டவர்களாகிய) விவேகிகள் |
| அதிமுச்ய | (சுரோத்திராதிகளின் பேரில் இதுவரைக்கும் அவிவேகத்தினுல் தாம் வைத்திருந்த ஆத்மபாவத்தை) விட்டு |
| அஸ்மாத்-லோகாத் | (ஈஷணத்ரயங்களில் சேர்ந்த புத்திர, மித்திர, களத்திர, பந்து, தன, கனக, வஸ்து, வாஹனுதிகளில் எமதென்ற அபிமானத்தையும், இந்திரியங்களின் கூட்டத்தால் நிறைந்திருக்கிற சரீரத்தில் நானென்கிற அகங்காரமு மில்லாதவராகையால்) இந்தச் சென்மத்தினின்றும், |
| ப்ரேத்ய | விடுபட்டு, |
| அம்ருதா: | மரணமற்றவர்களாய் (அவித்தியாகாரியங்களான ஜனனமரணங்களற்றவர்களாய்) முக்தர்கள் |
| பவந்தி | ஆகிறுர்கள். |

தாத்பரியம்.

சீடனே! இறந்துபோன சரீரத்தில் சுரோத்திரேந்திரியம் (காது) இருக்கிறது. இருந்தும் காதுசப்தங்களைக் கேட்கிறதில்லை. ஏன்? என்று குருகேட்க, சீடன், அச்சரீரத்தில் பிராணனில்லை ஆகையால் சப்தங்கள் கேட்கப்படவில்லை, என்றான். அப்படியானால், செவிடனுக்குப் பிராணனிருக்கிறது, காதுமிருக்கிறது, ஏன் அக்காதினால் சப்தங்கள் கேட்கப்படவில்லை? எனில், அவ்விவரங்களையெல்லாம் நன்றாய்த் தெரிந்துகொள்வதற்காகவே முதல் மந்திரத்திலுள்ள கேள்விகளை நான் கேட்டேன் எனக்கு நன்றாய்த் தெரியச்சொல்லி யருளவேண்டுமென்றான். குரு சொல்லுகிறதாவது:— பிராணனிருந்தபோதிலும் செவிடனுக்குக் காது கேளாமையால், சப்தத்தைக் கேட்பதற்காக பிராணனும், ஸ்தூலரூபமாயுள்ள காதும், அக்காதில் சப்தத்தைக் கிரகிக்கிறதற்கு அநுகூலமாய் கர்ணங்குளி (Tympanam) என்ற பேரையுடைய ஒரு சூக்ஷ்மமான பதார்த்தமும், இவைகளெல்லாம் உண்டாவதற்காதாரமான ஜன்மமும், அச்செனனமரணத்திற்குக்காரணமான அவித்தையும் ஜடபதார்த்தங்கள் ஆகையால், இவைகளெல்லாவற்றிற்கும் சுவதந்திர சக்தியில்லை யென்பதையும், சுவதந்திர சக்தியையுடைய வஸ்து பகவானை (ஆத்மாவை) க்காட்டிலும் வேறொருவஸ்து இல்லையென்றும் நன்றாய்த்தெரிந்துகொள், இதற்குச் சுருதிபிரமாணம்:—

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂
𑌨𑍇𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍋 𑌭𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌤𑍋𑌽𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃।
𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍁𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂
𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

(𑌕𑌠𑍋. 𑌵𑌲𑍍𑌲𑍀-ரு. 𑌵𑌾-கரு.)

சுருதி || நதத்ர ஸூர்யோபாதி நசந்திர தாரகம்
நேமாவித்யதோபாந்தி குதோயமக்நிஃ|
தமேவ பாந்த மநுபாதி ஸர்வம்
தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||

கடோ - வல்லி - ரு. வா - கரு.

(இ - ள்.) சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், அக்கினி முதலிய பிரகாச வஸ்துக்களுக்கு ஸ்வப்பிரகாசமானது இல்லை. இப்பிரபஞ்சத்திலிருக்கிற பிரகாசத்தையுடைய பதார்த்தங்களெல்லாம், ஓபகவானே ! உம்முடைய ஸ்வயஞ்சோதிபிரகாசத்தினுலல்லவோ எவையும் பிரகாசிக்கின்றன. என்றும்,

𑌶𑍍𑌲𑍋॥ 𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑍋
𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌂।
𑌯𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑍌
𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌕𑌂॥

(𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾. 𑌅-கரு. 𑌶𑍍𑌲𑍋-கஉ)

சுலோ || யதாதித்ய க்தம் தேஜோ ஜகத்பாஸயதே அகிலம்|
யச்சந்திரமஸி யச்சாக்நௌ தத்தேஜோ வித்தி மாமகம்||

(பகவத்கீதை. அத். கரு. சுலோ. கஉ.)

(இ - ள்.) சூரியன், சந்திரன்,[1] அக்கினி முதலானவைகளி லுள்ள பிரகாசமானது சகலத்தையும் விளக்கக்கூடியதாக விருந்தபோதிலும், இவைகளின் பிரகாசமானது எந்த பக வானுடைய (ஆத்மாவினுடைய) பிரகாசத்தை விளக்கிவைக் கமாட்டாவோ? முமுக்ஷுக்க ளெந்தப்பிரகாசத்தை யடை ந்தபிற்பாடு இச்செனனமரண ரூபமான ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவாரார்களோ, ஆகாசமானது கடமடாதி உபாதிபே தங்களினல் வேறுவேருய்த் தோன்றினும் அக்கடமடாதிக ளின் ஆகாசமானது மஹாகாசத்தின் அம்சமானற்போல, உபாதிபேதத்தினல் வேறுவேருய்த்தோன்றுகிற ஜீவதே ஜஸுக்கள் பகவானுடைய (ஆத்மாவினுடைய) தேஜஸ்ஸின் அம்சமேயாகுமோ, அந்த தேஜஸ்ஸானது சகல ஸ்வரூப மென்றும், சகல வியவகாரங்களுக்கும் ஆதாரமென்றும் அர் ஜுனனுக்குத் தெரியச்செய்ய யுத்தேசித்த ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி சொல்லுகிறதாவது: — அர்ஜுனா! சூரியமண்ட லத்தை அனுசரித்துக்கொண்டிருக்கிற எந்தப் பிரகாசமானது எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்கிறதோ, அப்படியே எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்யும் சந்திரனுக்கும், அக் கினிக்கும் உள்ள தேஜஸ்ஸானது, ஸர்வவியாபியான மகாவி ஷ்ணுவான என்னுடைய தேஜஸ்ஸென்றே தெரிந்துகொள்ள க்கடவை என்றும் சுருதி ஸ்மிருதிகள் கோஷிக்கிறபடியால்,

அந்தப் பகவானே (ஆத்மாவே, பிர்ம்மமே) செவி க்குச் செவியாகவும், மனதிற்கு மனதாகவும், வாக் குக்கு வாக்காகவும், பிராணனுக்குப் பிராணனுகவு மிருக்கிருரென்றும் (இந்த வியாக்கியான கர்த்தாவி னல் செய்யப்பட்டிருக்கிற ஈசாவாஸ் யோபநிஷத் தின் முதல் மந்திரத்தில் சொல்லியிருக்கிறபடி சகல த்தையும் பகவானுகப் பார்க்கிறவனுக்கு சோக மோ ஹாதிகளில்லை என்ற பிரகாரம்,) சுரோத்திராதி இங்

திரியங்களுடன் கூடின தன் சரீரத்தின் பேரிலுள்ள ஆத்ம புத்தியைவிட்டு, எல்லாம் பகவத்ஸ்வரூபமே யென்று சுவாநுபவத்தினால் தெரிந்துகொண்டு, அகங் கார மமகாரங்களைவிட்ட தீரனானவன், அவித்தை யையும், அவித்தியாகாரியமான சகல ஸம்ஸாரப் பிர விர்த்தியு மற்றவனாகி மோக்ஷத்தை யடைவானென் றும் இந்தமந்திரம் உபதேசிக்கிறது.

இந்த உபநிஷத்தின் முதல் கண்டம்,

அ-வது மந்திரத்தில் செவிக்குச்செவியா யிருக்கிற வர் பகவானே, என்ற விவரமும்,

கூ-வது மந்திரத்தில் மனதிற்கு மனதாயிருப்பவர் பகவானே என்ற விவரமும்,

ரு-வது மந்திரத்தில் வாக்குக்குவாக்காயிருப்பவர் பகவானே என்ற விவரமும்,

கூ-வது மந்திரத்தில் பிராணனுக்குப் பிராணனாயி ருப்பவர் பகவானே என்ற விவரமும்,

நன்றாய் வெளியாகுமாகையால் அங்கே பார்த்துக் கொள்ளவும்.

## மூன்றுவது மந்திரம்.

### அவதாரிகை.

மனது முதலான சகலத்தையும் விஷயங்களில் பிரவர்த்திக்கும்படி ஏவுகிறது யார்? என்று கேட்டதற்கு குரு, செவிக்குச்செவியென்றும், மனதிற்கு மனதென்றும் இவைமுதலான வாக்கியங்களைச்சொல்லி, இவ்விதமாய் சகலத்திற்கும் சகல ஸ்வரூபமாயிருக்கிறதெதுவோ? அதுவே பிர்ம்மமென்றுசொன்ன வாக்கியங்களைச் சிடனுகிய நான் நன்றாய்க்கேட்டேன். அந்தப் பிர்ம்மவஸ்து சகலஸ்வரூபமா யிருக்கும்பக்ஷத்தில் பானை, சட்டிகளைப்போல ஏன் கண்களுக்குக்காணப்படவில்லை? இப்படியே இந்திரியங்களால் ஏன் கிரகிக்கப்படுகிறதில்லை என்கிற கேள்விக்கு உத்தரமாக இந்த மந்திரம் பிரவர்த்திக்கிறது.

3.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃॥ 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿
𑌨 𑌵𑌾𑌗𑍍𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌨𑍋 𑌮𑌨𑌃।
𑌨 𑌵𑌿𑌦𑍍𑌮𑍋 𑌨 𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌮𑍋
𑌯𑌥𑍈𑌤𑌦𑌨𑍁𑌶𑌿𑌷𑍍𑌯𑌾𑌤𑍍॥ (௩)

சுருதி ॥ நதத்ர சக்ஷுர்கச்சதி நவாகச்சதி நோமநஃ।
நவித்மோ நவிஜாநீமோ யதைத தநுசிஷ்யாத் ॥

𑌤𑌤𑍍𑌰 தத்ர (ரூபமும், சலனங்களற்றதும், சுரோத்திரேந்திரியம் முதலியவைகளுக்

கு ஆத்மாவானதுமான) அந்தப்பிர்ம்மத்தினிடத்திற்கு

| | |
|---|---|
| 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃<br>சக்ஷு: | கண்ணானது |
| 𑌨 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿<br>நகச்சதி | போகாது. |
| 𑌵𑌾𑌕𑍍<br>வாக் | வாயானது (என்றால், சொல்லும்) |
| 𑌨 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿<br>நகச்சதி | போகாது. |
| 𑌮𑌨𑌃<br>மந: | மனதானது |
| 𑌨𑍋 (𑌗𑌚𑍍𑌛𑌤𑌿)<br>நோ (கச்சதி) | போகாது. |
| (𑌅𑌤𑌃)<br>அத: | (இக்காரணத்தினால்) |
| 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌮𑌃<br>நவித்ம: | (காது முதலான சகலேந்திரியங்களுக்கும் அந்தந்த ஸ்வரூபமாகவிருக்கிறதே ஆத்மா, என்றுபதேசிக்கும் குருவாக்கியங்களைத் தவிர வேறு மார்க்கத்தை எங்களுடைய புத்தியினால்) தெரிந்துகொள்ள முடியாமலிருக்கிறோம். |

நவிஜாநீம:
நவிஜாநீம: (அநேக சாஸ்திர பரிக்ஞானத்தினுல் பிராம்மணன் முதலிய ஜாதியில் சேர்ந்தது இந்த ஆத்மவஸ்து என்ருவது, கறுப்பு, சிவப்பு முதலான வர்ணங்களை யுடைய தென்ருவது, கணக்கன் என்ருற்போல இப்படிப் பட்ட கிரியை யிருக்கிறதினுல், ஏதாவது ஒரு காரணப்பெயரை யுடையதென்ருவது, இராஜபுருஷன் என்ருற்போல சம்பந்த விசேஷத்தைப்பற்றி ஏதாவது ஒருபேரையுடையதென்ருவது) தெரிந்துகொள்ள முடியாமலிருக்கிருேம்.

தர்ஹி
தர்ஹி ஆனுல்,

ஏதத் (ப்ரஹ்ம)
ஏதத் (பிர்மம்) (மனது முதலியவைகளை பிரேரணை செய்கிறதான) இந்த ஆத்மா (பிர்ம்மமானது)

யதா
யதா எவ்விதமாய்

அநுசிஷ்யாத்
அநுசிஷ்யாத் (குருவாவது சாஸ்திரமாவது) சீடனுக்குச் சொல்லிற்று? (என்பதையும் அறியோம்)

## தாத்பரியம்.

ஓ சீடனே! சகலேந்திரியங்களுக்கும் மற்றுமுள்ள யாவற்றிற்கும் ஆத்மாவாயிருக்கிற பிர்ம்மத்தினிடத்தில் பார்வையானது செல்லமாட்டாது. ஏனெனில் கண்ணுக்குக் கண்ணாயிருப்பதே பிர்ம்மமென்று சொல்லப்பட்டிருக்கிறபடியால், தன்னிடத்தில் தான் செல்லுகிற தென்பதில்லையல்லவா? ஓ சுவாமி! கண்ணால் முடியாமற்போனால் போகட்டும்; பார்க்கமுடியாத சுவர்க்கம் முதலானவைகளைப்பற்றி வாக்குக் கிரகிக்கவில்லையா? அப்படி ஏன் பிர்ம்மத்தை வாக்கினால் கிரகிக்கமுடியாது? எனில்,

ஶ்லோ॥ “வேதவாக்யைரவேதஸ்ய”

சுலோ ॥ வேதவாக்யை ரவேதஸ்ய॥

(இ - ள்.) இந்தபிர்ம்மத்தை வேதவாக்கியங்களே சொல்லமுடியாமல் நின்றுபோய்விட்டது. எனில்,

நம்முடைய வாக்காலே எட்டமுடியுமா? முடியாது சீடனே! என்றார்.

பின்னும் சீடன் சுவாமி! சம்பங்கிப்பூ, தாழம்பூ, மகிழம்பூ முதலான சுவாசனைகளையுடைய புஷ்பங்களின் வாஸனாபேதங்களை வாக்கினால் சொல்லமுடியாமற்போனபோதிலும், மனதினால் புஷ்பங்களின் வாஸனா வித்தியாசங்களைக் கிரகிக்கிறோமல்லவா? அப்படி பிர்ம்மத்தை மனதிலாவது கிரகிக்க முடியுமல்லவா?

என்றதற்கு; குரு சீடனே! சுழூத்தியில் இல்லாமற் போகிற மனதானது, சுழூத்தியை (நித்திராவஸ்தையை)த் தாண்டியிருக்கிற பிர்ம்மஸ்வரூபத்தினிடம் எப்படிப்போகும். ஆகையால் மனதினாலும் முடியாது. இதுவுமல்லாமல், எப்படி நெருப்பானதுசூட்டையுடைத்தானதாய்த் தன்னை யடைந்த எல்லா பதார்த்தங்களையும் சுடுகிறதுபோலவும், ஸ்வேச்சையாய்த் திரியும் பெரும்புலியின் சாரைகளைக் கணக்கிடச்சென்றவனை அப்பெரும்புலி கபளீகரிக்கிறது போலவும், நெருப்பானது தன்னிடத்திற்கு வந்த பதார்த்தத்தைத்தகித்து ஊர்பேரில்லாமற் செய்தபோதிலும் தன்னையுங்கூடச் சுடமாட்டாதோ! பெரும்புலி தன்னிடத்தில் வந்தவனைத் தான் பக்ஷித்து அவனை ஊர்பேரில்லாமற் செய்தபோதிலும் தன்னையுங்கூட எப்படி பக்ஷிக்கமாட்டாதோ, அப்படி பகவான் (ஆத்மா அல்லது பிர்ம்மம்) தன்னைச் சமீபிக்கும் மன்முதலானவைகளை நாமரூப ரகிதஞ்செய்து விடுமாகையால் பிர்ம்மத்தைச் செல்லமாட்டா. அப்படியானால், சுவாமி! அந்தப்பகவானை (பிர்ம்மத்தை) மற்றெவ்விதத்தினால் தெரிந்துகொள்ளக்கூடும்? எனில், வேதங்களின் ரகசியத்தை நன்றாய்த் தெரிந்து அநுட்டித்து ஸ்வாநுபவத்தை யடைந்திருக்கும் மகானுயிருக்கிற சத்குருவையடைந்து, ததநுஷ்டானஞ் செய்பவர்களாயுள்ள சீடர்களுக்கு, முன் வரப்போகிறவிதமாய் வெளியிடப்படும் என்றார். என்று இம்மூன்றாவது மந்திரம் உபதேசிக்கிறது.

---

# நான்காவது மந்திரம்.

அவதாரிகை.

சீடன், ஓ, மஹாசுவாமி! எல்லாந்தெரிந்த மஹாஞன சத்குருவினுலுபதேசத்தைப் பெற்ருலொழிய, பகவானை (பிர்ம்மத்தை) யடையமுடியாதெனில், அப்போது, பகவானை "அபவாத" ப்பொருளென்றே சொல்லவேண்டியதாயிற்று? எனில்,

குரு. அதற்குச் சந்தேகமென்னை, பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களைக் கடந்த ஸ்வாநுபவத்தா லல்லது தெரிந்துகொள்ள முடியாதென்பது, சத்தியமே:

சீடன். ஏன்? அப்பிர்ம்மத்தை (பகவானை) சாஸ்திரோபதேசத்தையடைந்து அதினுல்தெரிந்துகொள்ள முடியாதோ? எனில்,

குரு. முடியவே முடியாது என்பதை வெளியிடுகிறேன் கேள். எப்படியெனில்:—

4.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌅𑌨𑍍𑌯𑌦𑍇𑌵 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑌿𑌤𑌾
𑌦𑌥𑍋 𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌦𑌧𑌿।
𑌇𑌤𑌿 𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂
𑌯𑍇 𑌨𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌚𑌚𑌕𑍍𑌷𑌿𑌰𑍇॥ (௪)

சுருதி ॥ அந்ய தேவதத் விதிதா ததோ அவிதிதா் ததி।
இதி சுச்ரும பூர்வேஷாம் யேந ஸ்தத்வ்யச சக்ஷிரே॥

தச

தத் (எந்த ஆத்மவஸ்துவானது கண்ணுக்குக் கண்ணென்றும், மனதிற்கு மனதென்றும் இவைமுதலிய விசேஷணங்களால், பிரகிருதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதோ,) அந்த ஆத்மாவானது (பிர்மமானது)

விதிதாச

விதிதாத் தெரிந்துகொண்டதற்கும் (சாஸ்திரங்களை நன்றாய்ப்படித்து, அப்படிப் பின் விசேஷத்தால், தாம் எல்லாவற்றையுந் தெரிந்துகொண்டு விட்டோம், என்கிற அறிவிற்கும், அல்லது, திருஷ்டி கோசரமாகிய பிரபஞ்சத்தில் தனக்குத் தெரியாததொன்றுமில்லை யென்கிற அறிவிற்கும், அல்லது எவை தெரிந்துகொள்ளப்பட்டவைகளோ அவைகளெல்லாம் அல்பமானவைகள் துக்கத்தையே முடிவாக உடையவைகள், நிந்திக்கத்தக்க வைகளென்று அறியும் அறிவிற்கும்)

அயோ

அதோ பின்னும்

அவிதிதாச

அவிதிதாத் தெரிந்து கொள்ளாததற்கும் (இந்தக் காணப்படுகிற பிரபஞ்சத் திற்குக் காரணமான அவ்வியக்தத்திற்கும், என்றால், காரியமானது காரணத்

தைக்காட்டிலும் வேறே யில்லாதபடியால், இந்தக்காணப்படுகிற பிரபஞ்சம் காரியம், அவ்வியக்தமானது இப்பிரபஞ்சத்திற்கு காரணம். அப்படிப்பட்ட காரிய காரணஸ்வரூபமான அவ்வியக்த்தைக் காட்டிலும்)

அந்யத், ஏவ — வேருகவேயே இருக்கிறது.

இதி — என்று

யே (ஆசார்யா꞉) — யார் (எந்தமஹான்கள்)

ந꞉ — எங்களுக்காக

தத் — அந்த பிர்ம்மவிஷயமாய்

வ்யாசசக்ஷிரே — மிகத்தெளிவாகச் சொன்னர்களோ,

(தேஷாம்) — அப்படிப்பட்ட

பூர்வேஷாம் — (சம தமாதி சம்பன்னர்களும், வேதத்தை நன்ருய்த் தெரிந்துகொண்டிரு

க்கிறவர்களும், சத்குருவை யடைந்து அவர் சொற்படிபணிந்து நடந்து அவர்மூலமாய் ஸ்வாநுபவத்தை யடைந்திருப்பவர்களான) பூர்வீகர்களான பெரியோர்களுடைய

(வசநம்)
வசநம் — வாக்கியத்தை

ஶுஶ்ரும:
சுஸ்ருமஃ — (பரம்பராக்கிரமமாய் சீடனுக்குக் குருஉபதேசித்தா ரென்பதாக)கேட்டிருக்கிறோம்.

தாத்பரியம்.

ஓ சீடனே! எந்த பகவானனவர் கண்ணுக்குக் கண்ணென்றும், மனதிற்கு மனதென்றும், இன்னும் அநேகவிசேஷணங்களால் இரண்டாவது மந்திரத்திற் சொல்லப்பட்டு, தூண், துரும்பு முதலியனபோல இந்திரியங்களுக்கு விஷயமாகாமலிருக்கிறாரென்று சொல்லப்பட்டிருக்கிறாரோ, அப்படிப்பட்ட பிர்ம்மமானது சாஸ்திரங்களை நன்றாய்ப் படித்துச் சகலத்தையும் தெரிந்துகொண்டு விட்டோமென்றாகிலும், அல்லது, காணப்படுகிற இப்பிரபஞ்சத்தில் தமக்குத் தெரியாதவைகளொன்றுமில்லை யென்றாகிலும், அல்லது,

"யத்₃ த்₃ருஶ்யம் தந்நஶ்யம்" ॥

யத்திருச்யம் தந்நச்யம் ॥

(இ - ள்.) எது காணப்படுகிறதோ அது அழியக்கூடியது.

என்றாற் போல, தெரிந்துகொள்ளப்படுகிறவைகளெல்லாம் அல்பமானவைகள், துக்ககலப்புடைய

வைகள், ஆகையால் நிந்திக்கத்தக்கவைக ளென்று தெரிந்துகொண்ட ஸ்திதிக்கும், காரியத்தைத்தவிர காரணம் வேறேயில்லையாகையால், மண்ணைத்தவிர பானை சட்டி கலயம் முதலியவைகள் வேறல்லாத வாறுபோல, இப்பிரபஞ்சம் முதலியவைகளுக்குக் காரணமாகிய காணப்படாத அவ்வியக்கத்திற்கும், வேறாகவே இருக்கிறது அப்பரப்பிர்ம்மமென்றும், தெரிந்துகொள். சமதமாதிகுணங்களை யுடையவரும், நன்றாய் வேதங்களைக் கற்றவரும், சத்குருவையடைந்து சிசுரூஷைசெய்து அவரால் உபதேசிக்கப்பட்டு அதன் மூலமாய் ஸ்வாநுபவத்தை யடைந்திருப்பவர்களுமான பூர்வீகர்களால்,

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ "𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮"॥ "𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾𑌽𑌪𑌹𑌤
𑌪𑌾𑌪𑍍𑌮𑌾॥" 𑌯𑌤𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑌪𑌰𑍋𑌕𑍍𑌷𑌾𑌤𑍍॥
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌮𑌯 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌂॥

சுருதி || "அயமாத்மாபிர்ம்ம" "ய ஆத்மா பஹத பாப்மா"
"யத்ஸாக்ஷாதபரோக்ஷாத்"
"பிர்மம் மய ஆத்மா ஸர்வம்"

(இ-ள்.) "இந்த ஆத்மா பிர்ம்மமாக்கும்"; "எது சகலபாபரகிதமோ அதுதான் ஆத்மா" "எது அபரோக்ஷாநுபவத்தால் அடையமுடியுமோ அதுவே பிர்ம்மம்" "எல்லாம் ஆத்மஸ்வரூபமா யிருக்கிறபடியால் சகலமும் பிர்ம்மமே" என்ற சுருதிகளின்படி,

பரம்பரையாகவந்த உபதேசத்தினால், சீடனுக்கு உபதேசிக்கப்பட்டுவந்ததே யல்லாமல், தர்க்கம் முதலிய சாஸ்திர பரிக்ஞானத்தினாலும், அப்படிப்பினால்

நன்றாய் வாக்கியார்த்தம் சொல்லுகிறதினாலும், விவகாரத்தில் மிகவும் அறிவாளியா யிருக்கிறதினாலும், அநேக இடங்களில் போய் அநேகதடவைக் கேட்பதினாலும், யாகம் முதலியவைகளைச் செய்வதினாலும், அந்தப் பிர்ம்மத்தை யடையமுடியாதென்றும் சொன்ன வாக்கியத்தைக் கேட்டிருக்கிறோம். என்று இந்த நான்காவது மந்திரம் உபதேசிக்கிறது.

அபவாதமென்பதின் விவரம்:—

𑌶𑍍𑌲𑍋॥ 𑌰𑌜𑍍𑌜𑍁𑌸𑌰𑍍𑌪𑌵𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂
𑌜𑍀𑌵𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌭𑌯𑌂 𑌵𑌹𑍇𑌤𑍍।
𑌨𑌾𑌹𑌂 𑌜𑍀𑌵𑌃 𑌪𑌰𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿
𑌜𑍍𑌞𑌾𑌤𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌨𑌿𑌰𑍍𑌭𑌯𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍॥

*(𑌆𑌤𑍍𑌮𑌬𑍋𑌧. 𑌶𑍍𑌲𑍋. உசு.)

சுலோ॥ ரஜ்ஜுஸர்ப வதாத்மாநம் ஜீவம்ஞாத்வா பயம்வஹேத்॥
நாஹம்ஜீவஃபராத்மேதி ஞாதஸ்சேந் நிர்பயோபவேத்॥

* (ஆத்மபோத. சு - உசு.)

(இ - ள்.) கயிற்றைப்பார்த்து பாம்பென்று பயந்தவனைப் போல ஆத்மாவாகிய தன்னை, கர்த்திருத்துவாதிகளையுடைய கர்ம்ம சகிதனை ஜீவனாகஎண்ணி அநேக ஜனனமரணப் பிரவாக ரூபமான துக்கசமுத்திரத்தில் முழுகினவன்போல பயத்தை யடைகிறான். இவ்வித பயத்துடன் அநேக ஜன்மங்களில் நிஷ்காமமாகச் செய்த புண்ணிய புஞ்சபரிபாகத்தினால் சித்தசுத்தியை யடைந்து தன்னுடைய ஸ்வரூப ஞான

* இந்த வியாக்கியான கர்த்தாவினால் தெலுங்கு பாஷையில் ரசியிக்கப்பட்டிருக்கிற, "ஆத்மபோத தத்துவார்த்த தீபிகை" யின் உசு - வது சுலோகத்தைப் பார்க்கவும்.

மானது சுவாநுபவத்தினு லுண்டாகுங்காலத்தில் பயமற்றவ னுகிறான், இதில் பயத்தை யடைந்தவனைப்போலிருக்கும், ஸ்திதியே அத்தியாரோப ஸ்திதியென்றும், பயமற்ற ஸ்திதி யே அபவாத மென்றும் அறியவும்.

இதன்கருத்து. விரித்துப்பார்க்குங்கால் ஆரோப மென்றும், ஒடுக்கிப் பார்க்குங்கால் அபவாத மென் றும் அறியவும்.

இதற்குக்கைவல்லிய நவநீதத்தில்.

அரவன்றுகயிறென்றாற்போ லாளன்றுதறியென்றாற்போல்
குரவன்சொல்லுபதேசத்தாற் கூறுநூலொளியைக்கொண்டு
புரமன்றுபுவனமன்று பூதங்களன்றுஞானத்
திரமென்னும்பிரமமென்று தெளிவதேயபவாதங்காண்||

(தத்துவவிளக்கப்படலம்-௯௬.)

---

## ஐந்தாவது மந்திரம்.

### அவதாரிகை.

ஓ சுவாமி! காணப்படுகிற ஸ்தூல சூக்ஷ்ம பிரபஞ் சத்திற்கும், இப்பிரபஞ்சங்களுக்குக் காரணமான அவ் வியக்தத்திற்கும் வேறானதாயு மிருக்கிறதே பிர்ம்ம மென்று நான்காவது மந்திரத்தினால் சொன்ன அவ் வார்த்தைகளினால், என் மனதுக்குச் சமாதானமாக வில்லை. ஆகையால், நான் கேட்கிற கேள்விகளுக்கு என் மனதிற்கு நன்றாய்ப் பிடிபடும்படி சொல்லும். அதாவது, நாமரூபங்களற்றது பிர்ம்மமா? பிர்ம்ம, விஷ்ணு, ஈசுரன், இந்திரன், பிராணன் முதலியவைக

ளாக உபாசிக்கப்படுகிறது பிர்ம்மமா? இன்னும் அநேகர் பலவிதமாகச் சொல்லுகிறதில் எது பிர்ம்மம்? அவ்விவரத்தை எனக்கு நன்றாய்த் தெரியச்சொல்லுமென்றதற்கு; ௫, அவைகளிலொன்றும் பிர்ம்மமல்ல. எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும், சகலத்திற்கும் ஆத்மாவாயுமிருக்கிறதெதுவோ, அதுவே பிர்ம்மமென்று பின்வரும் ஐந்து மந்திரங்கள் சொல்லும். அவற்றைக் கவனித்துக் கேட்பாயாக, என்றனர்.

5.

𑌶𑍍𑌰𑍁॥ 𑌯𑌦𑍍𑌵𑌾𑌚𑌾𑌨𑌭𑍍𑌯𑍁𑌦𑌿𑌤𑌂
𑌯𑍇𑌨 𑌵𑌾𑌗𑌭𑍍𑌯𑍁𑌦𑍍𑌯𑌤𑍇।
𑌤𑌦𑍇𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌨𑍇𑌦𑌂 𑌯𑌦𑌿𑌦𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇॥ ௫॥

சுருதி ‖ யத்வாசா நப்யுதிதம்
யேநவாக ப்யுத்யதே ।
ததேவ ப்ருமத்துவம் வித்தி
நேதம் யதித முபாஸதே (௫)

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍<br>யத் | எந்த பிர்ம்மஸ்வரூபமானது |
| 𑌵𑌾𑌚𑌾<br>வாசா | (அந்ருத, ஜட, துக்க ஸ்வரூபமான) வாக்கினால் |
| 𑌅𑌨𑌭𑍍𑌯𑍁𑌦𑌿𑌤𑌂<br>அநப்யுதிதம் | பிரகாசிக்கப்படாதோ, (சொல்லமுடியாதோ) |

| | |
|---|---|
| 𑌯𑍇𑌨<br>யேந | (ஸ்வயம் பிரகாச ஸ்வரூபமான) எந்தப் பிர்ம்மத்தினுல் |
| 𑌵𑌾𑌕𑍍<br>வாக் | (எட்டு ஸ்தானங்களையுடைய) வாக்கானது |
| 𑌅𑌭𑍍𑌯𑍁𑌦𑍍𑌯𑌤𑍇<br>அப்யுத்யதே | பிரகாசிக்கச்செய்யப்படுகிறதோ, |
| 𑌤𑌦𑍍, 𑌏𑌵<br>தத், ஏவ | அஃதே |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮<br>பிர்ம்ம | (ஸர்வபரிபூரணமான) பிர்ம்மமென்று |
| 𑌤𑍍𑌵𑌂<br>த்வம் | (சாதனசதுஷ்டய சம்பன்னனுன) நீ |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿<br>வித்தி | தெரிந்துகொள். |
| 𑌯𑌦𑍍<br>யத் | (பிர்ம்ம, விஷ்ணு, உருத்திரன் முதலான ஸ்தாவர ஜங்கமரூபங்களாயுள்ள) எந்த வஸ்துவை |
| 𑌇𑌦𑌂<br>இதம் | இந்தஆத்மாவென்று (பிர்ம்மமென்று) |
| 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇<br>உபாஸதே | (இந்திரிய கோசரமாய்) உபாசிக்கப்படுகிறதோ, |
| (𑌤𑌦𑍍)<br>தத் | (அது) |

| | |
|---|---|
| உதம் இதம் | (நிர்க்குணத் தியானுப்பியாசத்திற்கு அருகனுயிருக்கிற உன்னை யொத்தவர்களால் உபாசிக்கப்படவேண்டிய) இந்த பிர்மஸ்வரூபம் |
| ந | அல்ல. |

தாத்பரியம்.

ஸர்வவியாபியாயும், ஸர்வாந்தரியாமியாயும், ஸர்வ ஸாக்ஷியாயும், ஸர்வ நியாமகனுயும், பரம தயாளுவாயும், நிர்விகாரியாயும், சுயம்பிரகாசமாயுமிருக்கிற எந்த பிர்ம்ம ஸ்வரூபமானது, அநுருத, ஜட, துக்கச்சொரூபமான எட்டுஸ்தானங்களையுடைய வாக்கினுல் பிரகாசிக்கச் செய்யப்படமாட்டாதோ, சித்சொரூபமான எந்த பிர்ம்மத்தினுல் இந்த வாக்கு பிரகாசப்படுகிறதோ, அதுவே ஸர்வபரிபூரணமான பிர்ம்மமென்று, சாதன சதுஷ்டய சம்பன்னனுயும், அவ்வநுஷ்டானமுடையவனுயும், சகுணத்தியானுப்பியாச ஸ்திதியைத் தாண்டினவனுயுமிருக்கிற நீ தெரிந்துகொள். நாமரூபங்களையுடைய பிர்ம்ம, விஷ்ணு, ருத்திராதி தேவதா ஸ்வரூபங்களாயும், ஸ்தாவர ஜங்கமரூபங்களாயுமிருக்கிற எந்த வஸ்துவை நிற்குண பிர்ம்மமென்று, சகுணுப்பியாச ஸ்திதியிலிருக்கிற சத்குருவையடைந்து உபதேசத்தைப்பெற்று அவ்வநுஷ்டானஞ் செய்யப் பிரயத்தனப்படாம லிருக்கிறவர்களா லுபாசிக்கப்படுகிற அப்படிப்பட்ட வஸ்துவானது, நிற்

குணத்தியானுப்பியாசத்திற்கு அருகனை உன்னைப் போலொத்தவர்களால் உபாசிக்கப்படவேண்டிய வஸ்துவல்லவென்றுந் தெரிந்துகொள். *

எட்டு ஸ்தானங்களையுடைய வாக்கின் விவரம்:—

𑌶𑍍𑌰𑍁॥ 𑌅𑌷𑍍𑌟𑍌 𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌨𑌿 𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾
𑌮𑍁𑌰𑌃 𑌕𑌣𑍍𑌠𑌃 𑌶𑌿𑌰𑌸𑍍𑌤𑌥𑌾।
𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌮𑍂𑌲𑌞𑍍𑌚 𑌦𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌚
𑌨𑌾𑌸𑌿𑌕𑍌𑌷𑍍𑌠𑍌𑌚 𑌤𑌾𑌲𑍁𑌚॥

சுருதி ॥ அஷ்டௌ ஸ்தாநாநி வர்ணாநா
முர꞉ கண்ட꞉ ஶிர ஸ்ததா।
ஜிஹ்வாமூலஞ்ச தந்தாஶ்ச
நாஸிகௌஷ்டௌச தாலுச॥

(இ - ள்.) மார்பு, கழுத்து, தலை, நாக்கின்மூலம், பற்கள், மூக்குத்துவாரங்கள், தாடைகள் இவ்வெட்டும் வாக்கின் வர்ணஸ்தானங்களாம்.

6.

𑌶𑍍𑌰𑍁॥ 𑌯𑌨𑍍𑌮𑌨𑌸𑌾 𑌨𑌮𑌨𑍁𑌤𑍇
𑌯𑍇𑌨𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍋𑌮𑌤𑌮𑍍।

---

* இந்த மந்திரம்முதல் ஐந்து மந்திரங்களால் தெரியச்செய்யப்படும் விஷயங்கள் சகுணத்தியானத்தை நிந்தித்ததாக அறிந்துகொள்ளக்கூடாது. மற்றென்னவெனில், சம தமாதி நற்குணங்களையுடைய சாதன சதுஷ்டய சம்பன்னனாயிருக்கிறவன் நிர்குணத்தியானுப்பியாசம் செய்யவேண்டுமேயல்லாமல் சகுணத்தியானத்தில் மனதை செலுத்தக்கூடாதென்று, சிடனுக்கு குரு, நிர்குணத்தியானுப்பியாசத்திற்குச் சாதனமான நிர்குண பிர்ம்ம ஸ்வரூபத்தைத் தெரிவிக்கிறவைகளென்றே தெரிந்து கொள்ளவேண்டும்.

𑌤𑌦𑍇𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌨𑍇𑌦𑌂 𑌯𑌦𑌿𑌦𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇॥ சா||

சுருதி || யந்மநஸா நமநுதே
யேநாஹு-ர் மநோமதம்|
ததேவ பிர்ம்மத்வம் வித்தி
நேதம் யதித முபாஸதே. (சு)

| | |
|---|---|
| 𑌯𑌤𑍍 யத் | எந்தப்பிர்ம்ம ஸ்வரூபமானது |
| 𑌮𑌨𑌸𑌾 மநஸா | அந்தக்கரணத்தினுல் |
| 𑌨 𑌮𑌨𑍁𑌤𑍇 நமநுதே | நினைக்கமுடியாதோ, (விஷயீகரிக்க முடியாதோ) |
| 𑌯𑍇𑌨 யேந | எந்தப்பிர்ம்ம ஸ்வரூபத்தினுல் |
| 𑌮𑌨𑌃 மநஃ | அந்தக்கரணமானது |
| 𑌮𑌤𑌂 மதம் | விஷயீகரிக்கப் படுமோ (தெரிந்து கொள்ளப்படுமோ) |
| 𑌤𑌤𑍍, 𑌏𑌵 தத், ஏவ | அஃதே |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 பிர்ம்ம | (சகலத்திற்கும் ஆத்மாவான) பிர்ம்ம ஸ்வரூபமாக |

| | |
|---|---|
| விஜ்ஞி<br>வித்தி | தெரிந்துகொள். |
| யசு<br>யத் | (வெவ்வேறு நாமரூபங்களுடன் கூடிய தேவதாரூபமான) எந்தவஸ்துவை (தெய்வங்களை) |
| ஐதம்<br>இதம் | இந்தநிற்குண பிர்ம்மமென்று |
| உவாஸதெ<br>உபாஸதே | (சகுணப்பியாச ஸ்திதியிலிருக்கிற சத்குரூப தேசத்தை யடையாதவர்கள்) உபாசிக்கிறார்களோ, |
| (தசு)<br>தத் | அது |
| ஐதம்<br>இதம் | (நிற்குணத் தியானப்பியாசத்திற்கு அருகனான உன்னைப்போன்றவனால் அநுஷ்டிக்கப் படவேண்டிய) இந்தப் பிர்ம்மஸ்வரூபம் |
| ந<br>ந | அல்ல. |

தாத்பரியம்.

அந்தக்கரணம் நான்கென்றும், இரண்டென்றும், ஒன்றென்றும் சந்தர்ப்பாநுசாரமாக கிரந்தங்களில் ஆங்காங்கு சொல்லப்படுகின்றன. நிஜத்தைக்குறித்துத் தனியாய்விசாரணை செய்யுங்கால், அந்தக்கரணமானது ஐந்து பூதங்களின் சேர்க்கையாலுண்டானதாக முடியும். ஆகையால், அஃது ஐந்து பூதங்களின்

பாகங்களை யுடைத்தானதா யிருக்கவேண்டு மென்பது நிச்சயம். அந்தக்கரணமானது சமஷ்டிவாசகம். அதாவது, பஞ்சபூதங்களினுடைய சேர்க்கையாலுண்டான ஒரு வஸ்துவினுடைய பேராகும். அதில் (அந்தக்கரணத்தில்) ஆகாசத்தின் பாகமானது மற்று நான்கு பூதங்களினுடைய பாகத்தைப் பார்க்கிலும் அதிகமா யிருக்கும்போதுள்ள சித்த விருத்திக்கு, உள்ளம் எனப்படும். என்றால், பிரக்ஞானம், எனப்படும். அந்த ஸ்திதியில் அந்தக்கரணமானது, சுத்தமாயும், சகல விஷய ஆசைகளற்றதாயும், அந்தர்முக திருஷ்டி வியாபகமாயும், (நிஜமான தன்னைத்தான் தெரிந்து கொள்ளுகிற தென்கிற உட்பார்வையையுடைய ஞானக்கண்ணுடையதாகவும்,) இருக்கும்.

அந்த, அந்தக்கரணத்தில் வாயுவின் பாகம் அதிகப்பட்டு மற்ற பூதங்களின் பாகம் குறைந்திருக்குங் காலையில் உள்ள சித்தவிருத்திக்கு, மனது என்று சொல்லப்படும். அப்படிப்பட்ட ஸ்திதியில் அந்தக்கரணமானது சங்கல்ப விகல்பங்களை யுடைத்தானதாய், புசலுற்ற சமுத்திரம்போல காமசங்கல்பங்களென்ற அலைகளால் நிறைந்திருக்கும்.

அந்தக்கரணத்தில் தேஜஸின் பாகம் அதிகமாயும் மற்ற பூதங்களின் பாகம் குறைந்துமிருக்கும்போதுள்ள சித்தவிருத்திக்கு புத்தி எனச் சொல்லப்படும். அப்படிப்பட்ட ஸ்திதியில் அந்தக்கரணமானது நிச்சயாத்மகமானதாயிருக்கும். என்றால், நன்மையோ, தீமையோ, ஏதோவொன்றை நிச்சயம் செய்துகொண்டு அம்முகமாய் நிற்கும்.

அந்தக்கரணத்தில் ஜலத்தின் பாகம் அதிகமாயும், மற்றவைகள் குறைந்துமிருக்கும்போதுள்ள சித்த விருத்தியை சித்தம், என்றழைக்கப்படும். அப்படிப் பட்ட ஸ்திதியில் அந்தக்கரணமானது ஏதோ வொன்றைச் சிந்தனை செய்துகொண்டிருக்கும்.

அந்தக்கரணத்தில் பிருதிவியின் பாகம் அதிகமாயும் மற்றவைகள் குறைந்துமிருக்கும்போதுள்ள சித்தவிருத்திக்கு அகங்காரம் என்பர் பெரியோர். அந்த ஸ்திதியில் அந்தக்கரணமானது கோபதாபங்களை யுடைத்தாகி, கிருஷ்ண சர்ப்பத்தைப்போல், சீறிக்கடிக்கும்.

இப்படி ஐந்து ஸ்திதியிலுமிருக்கிற ஒரே அந்தக் கரணமானது அந்தந்தத் தருணங்களைக்கொண்டு வேறுவேறான பேரை யுடைத்தாயிருக்கும். இப்படிப் பட்ட அந்தக்கரணமானது எல்லாப் பிரவிருத்தி நிவிருத்தி விஷயங்களைக் குறித்துச் செல்லுமேயல்லாது, அப்படிச் செல்லுவதற்கு சக்தியைக்கொடுக்கிற பிர்ம்மத்தை (ஆத்மாவை) க்குறித்துச்செல்லமாட்டாது. ஏனெனின், பிர்ம்மமானது (ஆத்மா) அந்தக் கரணத்திற்கு விஷயமாகக் கூடினதல்ல. மற்றெவ்வாறெனில், அந்தக்கரணமானது பிர்ம்மத்திற்கு விஷயமாக இருக்கிறது. எப்படியெனில்,

ஶ்ரு॥ ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம॥
ஸர்வம் கல்விதம்பிர்ம்ம॥

(இ-ள்.) எல்லாம் பிர்ம்மத்தினிடத்திலிருந்தே உண்டானவைகள். ஆகையால், அந்தக்கரணமானது பிர்ம்மத்தைத் தெரிந்துகொள்ளமாட்டாது.

சீடன்கேள்வி. பசுவினிடத்திலிருந்துண்டான கன்றும், தாய்தந்தைகளாலுண்டான சிசுவும், தன் தாயைத் தெரிந்துகொள்ளுகிறுப்போல, பிர்ம்மத்தினிடமிருந்துண்டான அந்தக்கரணமும் பிர்ம்மத்தை நன்ருய்த் தெரிந்துகொள்ளும் என்பதில் சந்தேகம் ஏன்?

குருவின்உத்தரம். அப்படியானல் பசுவினிடமிருந்து வந்த இறந்துபோனகன்றுக்கும், தாய்தகப்பன் மூலமாய்வந்த இறந்துபோன மகனுக்கும், கண்முதலான இந்திரியங்க ளிருந்தபோதிலும் எப்படி தெரிந்து கொள்ளுகிற தில்லையோ, அப்படி பிர்ம்மத்தி னிடத்திலிருந்துண்டானவைகளெல்லாம் பிர்ம்மத்தை காலத்திரயத்திலும் தெரிந்துகொள்ள முடியா.

சீடன்கேள்வி. பிராணனில்லை யாகையால் தெரிந்து கொள்ளமுடியா. நான்சொன்னது பிராணனுடன் கூடியிருக்கும் கண்முதலிய வைகளால் தெரிந்துகொள்ளக் கூடுமென்பதாம்.

குருவின்உத்தரம். அப்படியானல் மூர்ச்சை நித்திரை முதலிய அவஸ்தைகளில் பிராணனும் இந்திரியங்களுமிருந்தும் தெரிந்துகொள்ள முடியாமையால் பிர்ம்மத்தை (பகவானை) ஒருக்காலும் இந்திரியங்களால் தெரிந்துகொள்ள முடியாது.

ஆகையால் சீடனே! எந்தவஸ்துவானது அந்தக்கரணம் முதலான எல்லாவற்றையும், அவ்வந்தக்கரணத்திற் காதாரமான பஞ்சபூதங்களையும், அப்பூதங்களுண்டாகிறதற் காதாரமான அகங்கார தத்துவத்தையும், அத்தத்துவமுண்டாவதற் காதாரமான மஹத

த்துவத்தையும், அம்மகத்தத்துவ முண்டாவதற் கா தாரமான அவ்வியக்த்தத்தையும், வியர்பித்துக்கொ ண்டிருக்கிறதோ? அதுவே பிர்ம்மமென்றும், சகுண த்தியானுப்பியாச ஸ்திதியிலிருக்கும் சத்குருபதேசத் தைப் பெறுதவர்கள், ஞாதுரு ஞான ஞேய பேதங்க ளுடன் உபாஸிக்கிற வேறு வேறு நாமரூபங்களுடன் கூடின தேவதைகள், சம தமாதி சாதன சதுஷ்டய சம்பத்தை யடைந்திருக்கிற உன்னைப்போலொத்த வர்களா லநுஷ்டிக்கப்படவேண்டிய இந்த நிர்க்குண பிர்ம்ம மல்லவென்றுந் தெரிந்துகொள்.

எல்லாப் பிரவிருத்தி நிவிருத்திகளுக்கும் அந்தக் கரணமே காரணமென்பதற்குச் சுருதிப்பிரமாணம்:-

ஶ்ருதி꞉। காம꞉ ஸங்கல்போ விசிகித்ஸா ஶ்ரத்தா(அ)ஶ்ரத்தா
த்ருதிரத்ருதிர்ஹ்ரீர்தீர்பீரித்யேதத்
ஸர்வம் மன ஏவ॥

சுருதி || காமஸங்கல்போ விசிகித்ஸா
ச்ரத்தா அச்ரத்தா த்ருதி
ரத்ருதி ர்ஹ்ரீ ர்தீ ர்பீ
ரித்யேதத் ஸர்வம் மநஏவ||

(இ - ள்.) கோரிக்கை, சங்கல்பம், இச்சை, சிரத்தை, அச்சிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, புத்தி, பயம் முதலான இவைகளெல்லாம் மனதாகிய அந்தக்கரணத்தில் விரிபவைகளே யென்று, வாஜஸநேய சுருதியில் சொல்லப் பட்டிருக்கிறது.

அந்தக்கரணமானது பிர்ம்மத்தைத் தெரிந்துகொள்ளமாட்டாதென்பதற்கு:—

ஶ்லோ॥ நத்வம்வேத்த பரந்தப !

஭கவத்கீதா. ௪-௪. ஶ்லோ-௫.

சுலோ || நத்வம்வேத்த பரந்தப ! ||

பகவத்கீதை - அத். ச. சுலோ. ரு.

ஶ்லோ॥ நத்வஹம் தேஷுதேமயி॥

஭கவத்கீதா. ௪-௭. ஶ்லோ-௧௨.

சுலோ || நத்வஹம் தேஷுதேமயி ||

பகவத்கீதை - அத். எ. சுலோ. கஉ.

ஶ்லோ॥ நமாம்துஷ்க்ருதிநோமூடா: ப்ரபத்யந்தே॥

஭கவத்கீதா. ௪-௭. ஶ்லோ-௧௫.

சுலோ || நமாம்துஷ்கிருதி நோமூடா:ப்ரபத்யந்தே ||

பகவத்கீதை - அத. எ. சுலோ. கரு.

ஶ்லோ॥ மாந்துவேத நகஶ்சந॥

஭கவத்கீதா. ௪-௭. ஶ்லோ-௨௬.

சுலோ || மாந்துவேத நகஸ்சந ||

பகவத்கீதை - அத். எ. சுலோ. உசு.

ஶ்லோ॥ மத்ஸ்தாநி ஸர்வபூதாநி

நசாஹம்தேஷ்வவஸ்தித:॥

஭கவத்கீதா. ௪-௯. ஶ்லோ-௪.

சுலோ || மத்ஸ்தாநி ஸர்வபூதாநி

நசாஹம்தேஷ்வவஸ்தித:||

பகவத்கீதை. அ. கூ. சுலோ. ச.

ஶ்லோ॥ பரம் பாவமஜாநந்தோ ... ... ...

ஸப்தஶதீ ௯-அ. ஶ்லோ-௧௧.

சுலோ ‖ பரம்பாவமஜாநந்தோ ... ... ...

பகவத்கீதை. அத்-௯-சுலோ-௧௧.

ஶ்லோ॥ ந து மாமபிஜாநந்தி ... ... ...

ஸப்தஶதீ. ௯-அ. ஶ்லோ-௨௪.

சுலோ ‖ நதுமாமபிஜாநந்தி ... ... ...

பகவத்கீதை. அத்-சுலோ-௨௪.

அந்தக்கரணத்தி னம்சமான ஞானமுங் கூட பிர்ம்மநிஷ்டையில் இருக்கமாட்டாதென்பதற்கு:—

ஶ்லோ॥ ஜ்ஞாநம் ஸ்வயம் நஶ்யேஜ்ஜலம் கதகரேணுவத்॥

ஆத்மபோத. ஶ்லோ-௫.

சுலோ ‖ ஞாநம்ஸ்வயம்நஸ்யேத் ஜலம்கதகரேணுவத்

(ஆத்ம - சுலோ - ௫.)

(இ - ள்.) தேற்றாங் கொட்டையை அரைத்து சேற்றுச் ஜலத்திற்கலந்துவைத்த சற்றுநாழிகைக்குப் பிறகு, அத்தேற்றாங்கொட்டையின் ரேணுக்கள் அச்சலத்திலுள்ள அழுக்கெல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து அடியிற் றங்கும்படிசெய்து தானும் அந்த அழுக்குகளுடன் சேர்ந்துவிடுவதினால் தாகத்துக்குறிய சுத்தமான ஜலம் மேலே நின்றுவிடுவதுபோல், அந்தக்கரணத்தின் ஸத்தாம்சமான ஞானமானது அவிவேகத்தைப்போக்கி அந்தக்கரணத்தைப் பிர்ம்மத்தில் லயிக்கச் செய்து தானும் நசித்துவிடும்.

7.

ஶ்ருதி॥ யச்சக்ஷுஷா ந பஶ்யதி

யேந சக்ஷூம்ஷி பஶ்யதி।

தடெஉவஹ்ர ஹூகூ௦விஃி
டெநஉ௦யஉிஉஉ¬வாஸடெத॥ எ॥

சுருதி ॥ யச்சக்ஷுஷா நபஸ்யதி
யேந சக்ஷூம்ஷி பஸ்யதி।
ததேவ பிர்மம் த்வம் வித்தி
நேதம் யதித முபாஸதே (எ)

யசு
யத் — எந்த பிர்ம்மஸ்வரூபமானது

ஙக்ஷு¬ஷா
சக்ஷுஷா — (ரூபங்களைக் கிரகிக்கிற) நேத்திரத்தால்

ந, வஶ்ய)தி
ந, பஸ்யதி — பார்க்கமுடியாததோ,

டெய_ந
யேந — (எல்லாவற்றிலும் சைதன்னிய ஸ்வரூபமாயிருக்கிற) எந்த பிர்ம்மவஸ்துவினால்

ஙக்ஷு஡ஷி
சக்ஷூம்ஷி — கண்களினுடைய வியாபாரங்கள்

வஶ்ய)தி
பஸ்யதி — பார்க்கப்படுமோ, (விஷயீகரிக்கப்படுமோ, எனில், பிர்ம்மசைதன்னியத்தின் உதவியில்லாமல் 'கண்கள் பார்வையைஉடைத்தாயிருக்கமுடியாது என்பது).

| | |
|---|---|
| தச, ஏவ<br>தத், ஏவ | அதுவே, |
| ஸ்ரு ஹ<br>பிர்ம்ம | பிர்ம்மமென்று |
| த்வம்<br>த்வம் | நீ |
| விஜி<br>வித்தி | தெரிந்துகொள். |
| யச<br>யத் | (நாமரூபங்களுடன் கூடின தேவதா ரூபமாக) எந்தவஸ்துவை |
| இதம்<br>இதம் | இந்த பிர்ம்மமென்று |
| உபாஸதே<br>உபாஸதே | (சகுணத்தியான ஸ்திதியிலிருக்கிற சத்குருபதேசத்தைப் பெறுதவர்கள் நிரவயவமாயிருக்கிற பொருளுக்கு அவயவங்களைக் கற்பித்துக்கொண்டு) உபாஸனை செய்கிறார்களோ, |
| (தச)<br>தத் | அது |
| இதம்<br>இதம் | (நிற்குணத் தியானப்பியாசத்திற் கருகனை உன்னைப்போலொத்த சாதனசதுஷ்டய சம்பத்தையுடையவர் |

களால்உபாஸிக்கப்படவேண்டிய)
இந்தபிர்ம்மஸ்வரூபம்

அல்ல.

தாத்பரியம்.

𑌶𑍍𑌲𑍋|| 𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑍍𑌯𑌏𑌕𑌃
𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂𑌲𑍋𑌕𑌮𑌿𑌮𑌂𑌰𑌵𑌿𑌃।
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑍀 𑌤𑌥𑌾𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂
𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌯𑌤𑌿𑌭𑌾𑌰𑌤 ! ||

𑌭𑌗𑌵𑌦𑍍𑌗𑍀𑌤𑌾. 𑌅.௧௩. 𑌶𑍍𑌲𑍋-௩௪.

சுலோ || யதா ப்ரகாசயத்யேக:
க்ருத்ஸ்நம் லோக மிமம் ரவி:।
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா
க்ருத்ஸ்நம் ப்ரகாசயதி பாரத !||

(பகவத்கீதை. அத்-கங-சுலோ-ஙச.)

(இ - ள்.) சூரியன் இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றை யும் எப்படி பிரகாசிக்கச் செய்துகொண்டிருக்கிறனே, அப் படி பரமாத்மா இந்த சராசர பிரபஞ்சரூபமாயுள்ள சகலத் தையும் பிரகாசிக்கச்செய்கிற ரென்றார்போலும்,

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿|| 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃
𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌚𑌾𑌕𑍍𑌷𑍁𑌷𑍈𑌰𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑌦𑍋
𑌷𑍈𑌃 । 𑌏𑌕𑌸𑍍𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾
𑌤𑍍𑌮𑌾 𑌨 𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 𑌲𑍋𑌕 𑌦𑍁𑌃𑌖𑍇𑌨 𑌬𑌾
𑌹𑍍𑌯𑌃||

சுருதி || சூர்யோ யதா ஸர்வலோகஸ்ய சக்ஷு:
நலிப்யதே சாக்ஷுஷைர் பாஹ்ய தோஷை:|
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா
நலிப்யதே லோக துக்கேந பாஹ்யே||

(இ - ள்.) எல்லாவற்றிற்கும் பிரகாசத்தைக் கொடுத்துக் கொண்டு கண்ணுக்கு கண்ணாயிருக்கிற சூரியனானவன், கண்களினாலுண்டாகும் பார்வைதோஷங்களுக்கு எப்படி சம்பந்தப்படுகிறதில்லையோ, அப்படி ஒருவனாயும் சகலத்திற்கும் ஒளியாயுமிருக்கிற பரமாத்மா, இப்பிரபஞ்சத்தின் சுகதுக்கங்களுக்குச் சம்பந்தப்படுகிறதில்லை; என்றார் போலும்:—

ஶ்ருதி॥ யத்வத்ஸவிதர்யுதிதே
கரோதி கர்மாணிஜீவலோகோயம்।
நசதாநிகரோதிரவி:
நகாரயதிதத்வதாத்மாபி॥

சுருதி || யத்வத் ஸவிதரி யுதிதே கரோதி
கர்மாணி ஜீவலோகோயம்|
நசதானி கரோதி ரவி:
நகாரயதி தத்வ தாத்மாபி||

(இ - ள்.) சூரியப் பிரகாசத்தினாலேயே எல்லாம் பிரவர்த்திமார்க்கத்தில் பிரவர்த்தித்த போதிலும், சூரியன் எப்படி தானொன்றுஞ் செய்யாமலும் ஒன்றையும் செய்விக்காமலுமிருக்கிறானோ, அப்படி பரமாத்மா தானொன்றுஞ் செய்யாமலும் செய்விக்காமலு மிருந்தபோதிலும் ஆத்மசைதன்னியத்தினாலேயே எல்லாம் தந்தம் விஷயங்களிற் செல்லுகின்றன, என்றார்போலும்.

ஶ்லோ॥ ஆத்மைவ தத்ஸாக்ஷி த்ருக்
தேஹேந்த்ரியமநோதியாம்।

𑌸𑍍𑌵𑌕𑍀𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇
𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌲𑍋𑌕𑌂 𑌯𑌥𑌾𑌜𑌨𑌾𑌃॥

𑌶𑍁𑌦𑍍𑌧𑌬𑍋𑌧. 𑌶𑍍𑌲𑍋-௧௧.

சுலோ || ஆத்மசைன்ய மாச்ருத்ய
தேஹேந்திரிய மநோதியஃ|
ஸ்வகீயார்தேஷு வர்தன்தே
ஸூர்யாலோகம் யதாஜநாஃ||

(இ - ள்.) ஜனங்கள் எப்படி சூரியப்பிரகாசத்தை ஆதாரமாகக்கொண்டு தங்கள் தங்கள் காரியங்களில் பிரவிர்த்திக்கிறார்களோ, அப்படி ஸ்தூலாதிதேகங்களும் ஞானகர்மேந்திரியங்களும் பிராணாதிவாயுக்களும் மனது, புத்தி முதலியவைகளும், பரமாத்ம சைதன்னியத்தை ஆதாரமாகக்கொண்டு தங்கள் விஷயங்களில் பிரவிர்த்திக்கின்றன, என்றும்போலும்.

இயற்கையாகவே ஜடமாகவிருக்கிற வாக்கேந்திரியமானது எந்த பரமாத்மவஸ்துவை வசனங்களால் சமீபிக்கமாட்டாதோ, எந்தவாக்கை சைதன்னிய ஸ்வரூபமாயிருக்கிற பரமாத்மவஸ்து வசனக்கிருத்தியங்களைச் செய்யும்படி செய்கிறதோ, அதுவே பரமாத்மாவாகிய பிர்ம்மவென்றும், சித்தத்தை யபகரிக்கிற சத்குருபதேசத்தை யடையாமல், வித்தத்தை யபகரிக்கிற அஸத்துக்களின் உபதேசத்தைப் பெற்றிருக்கும் அவிவேகிகளால், நிரவயவ ஸ்வரூபியாயிருக்கிற வஸ்துவிற்கு அவயவாதிகளைக் கல்பித்து நாமரூபங்களுடன் சகுணமாய் உபாசிக்கப்படுகிற தெய்வமானது, சாதனசதுஷ்டய சம்பன்னனாயும் சத்குருவையடைந்து உபதேசிக்கப்பெற்று நிற்குணத் தியானப்பியா

சத்திற்கு அருகனுன உன்னைப்போன்றவர்களால் உபாசிக்கப்படவேண்டிய இந்த நிற்குண பிர்ம்மமல்ல வென்றுந் தெரிந்துகொள்ளக் கடவை. அப்படியே.

---

## எட்டாவது மந்திரம்.

8.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 𑌨𑌶𑍃𑌣𑍋𑌤𑌿
𑌯𑍇𑌨𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌂𑌶𑍍𑌰𑍁𑌤𑌂।
𑌤𑌦𑍇𑌵𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑌂𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌨𑍇𑌦𑌂𑌯𑌦𑌿𑌦𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇॥ ௮॥

சுருதி ॥ யச்ரோத்ரேண நஶ்ருணோதி
யேநச்ரோத்ர மிதம் ஶ்ருதம்।
ததேவ பிர்ம்மத்வம் வித்தி
நேதம் யதித முபாஸதே॥ (அ)

𑌯𑌤𑍍 / யத் — எந்த பிர்ம்மமானது

𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣 / ஶ்ரோத்ரேண — காதினல்

𑌨 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 / ந, ஶ்ருணோதி — கேட்கமுடியாததோ,

𑌯𑍇𑌨 / யேந — (சகலத்திற்கும் ஆத்மாவாயிருக்கிற) எந்த வஸ்துவினுல்

| | |
|---|---|
| இதம், ஶ்ரோத்ரம் | இந்தக்காதானது |
| ஶ்ருதம் | கேட்கிறதோ, |
| தத், ஏவ | அதுவே |
| பிர்ம்ம | மர்ம்மமென்று |
| த்வம் | நீ |
| வித்தி | தெரிந்துகொள். |
| யத் | (நாமரூபங்களை யுடைத்தான) எந்த வஸ்துவை |
| இதம் | இந்த பிர்மமென்று |
| உபாஸதே | (அவிவேகிகள் எந்ததெய்வத்தை வித்தாபஹார குருவினு லுபதேசிக்கப்பட்டு, அவயவங்களைக் கற்பித்து நாமரூபங்களுடன் சகுணமாக) உபாசிக்கிறார்களோ |
| தத் | அந்தத்தெய்வமானது, |

ஊடிம் (சாதன சதுஷ்டயத்தையுடைய நிற்
இதம் குணத்தியானுப்பியாசத்திற்குத் த
குந்த உன்னைப்போன்றவர்களால்
உபாசிக்கப்படத்தக்க) இந்தப் பிர்
ம்மஸ்வரூபம்

ந அல்ல.
ந

தாத்பரியம்.

திக்கு என்ற தேவதையை அதிதைவதமாகவுடைய தும், பஞ்சபூதங்களில் அக்கினியின் அம்சமானதும், மநோவியாபாரத்துடன்கூடினதும், இவைகளெல்லா மிருந்தபோதிலும் ஆத்ம சைதன்னியத்தினுடைய ஒத்தாசையை யடையாமல் தானுகக் கேட்கக்கூடிய சக்தியற்ற ஜடமானதுமான சுரோத்திரேந்திரியமா னது, தனக்குச் சக்தியைக் கொடுக்கிற பிர்ம்மத்தை (ஆத்மாவை=பகவானை) தெரிந்துகொள்ளமாட்டாது. எந்த சைதன்னியத்தினுல், இக்காது முதலியன சக லமும் தங்கள்தங்கள் கோளங்களிற் பிரவிர்த்திக்கின்ற னவோ, அதுவே பிர்ம்மமென்றும், ஞாதுரு ஞான ஞேய பேதங்களுடன் நாமரூபங்களை யுடைத்தான தாய்ச் சத்குருபதேசத்தை யடையாதவர்களால் உபா சிக்கப்படும் அத்தெய்வமானது, சாதன சதுஷ்டயத் தை அப்பியாசித்து சத்குருபதேசத்தைப் பெற்றிருக் கிற உன்னைப்போன்றவர்களால் உபாசிக்கப்படவேண் டிய இந்தப்பிர்மமல்லவென்றுந் தெரிந்து கொள்.

## ஒன்பதாவது மந்திரம்.

9.

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌯𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨 𑌨𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌤𑌿
𑌯𑍇𑌨𑌪𑍍𑌰𑌾𑌣 𑌪𑍍𑌰𑌣𑍀𑌯𑌤𑍇।
𑌤𑌦𑍇𑌵 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍍𑌵𑌂𑌵𑌿𑌦𑍍𑌧𑌿
𑌨𑍇𑌦𑌂𑌯𑌦𑌿𑌦𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇॥ ௯॥

சுருதி ॥ யத்ப்ராணேந நப்ராணிதி
யேநப்ராண ப்ரணீயதே।
ததேவ பிர்ம்மத்வம் வித்தி
நேதம் யதித முபாஸதே॥ (௯)

𑌯𑌤𑍍
யத் — எந்த பிர்மமஸ்வரூபமானது

𑌪𑍍𑌰𑌾𑌣𑍇𑌨
ப்ராணேந — (உச்சுவாஸ, நிச்சுவாஸரூபமாயிருக்கிற) பிராணவாயுவினால்

𑌨, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌤𑌿
ந, ப்ராணிதி — (வாஸனைகளைத் தெரிந்துகொள்ளுகிற சேஷ்டை யிருக்கிறாப்போல) தெ தெரிந்துகொள்ளப் படமாட்டாதோ,

𑌯𑍇𑌨
யேந — (சைதன்னியஸ்வரூப்மான) எந்தப் பிர்ம்மத்தினால்

𑌪𑍍𑌰𑌾𑌣𑌃
ப்ராணஃ — பிராணவாயுவானது

| | |
|---|---|
| 𑌪𑍍𑌰𑌣𑍀𑌯𑌤𑍇<br>ப்ரணீயதே | சேஷ்டையையுடைத்தானதாகச் செய்யப்படுகிறதோ, |
| 𑌤𑌤𑍍, 𑌏𑌵<br>தத்; ஏவ | அதுவே |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮<br>பிர்ம்ம | பிர்ம்மமென்று |
| 𑌤𑍍𑌵𑌂<br>த்வம் | நீ |
| 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿<br>வித்தி | தெரிந்துகொள். |
| 𑌯𑌤𑍍<br>யத் | (நாமரூபக்கிரியைகளையுடைய பிர்ம்ம விஷ்ணு, ருத்திராதி தேவதைகளாக) எந்த வஸ்துவானது |
| 𑌇𑌦𑌂<br>இதம் | இந்த நிற்குண, நிரவயவ பிர்ம்மமாக |
| 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇<br>உபாஸதே | (சத்குருபதேசத்தையடையாத சகுணப்பியாச ஸ்திதியிலிருக்கிறவர்களால்) உபாஸிக்கப்படுகிறதோ, |
| 𑌤𑌤𑍍<br>தத் | அந்த வஸ்துவானது |
| 𑌇𑌦𑌂<br>இதம் | (சாதனசதுஷ்டய ஸ்திதியையடைந்து சத்குருபதேசத்தை யடையக் |

கூடிய உன்னைப் போன்றவர்களால், உபாசனை செய்யப்படவேண்டிய) இந்த் நிற்குணப் பிர்ம்மம்

ந
க அல்ல.

தாத்பரியம்.

பிருதிவியை அதிதைவதமாகவுடையதும், அந்தக் கரணத்துடன் கூடினதாய் மூக்குத் துவாரங்களில், சைதன்னிய ஒத்தாசையில்லாமல் உச்சுவாஸ நிச்சுவாஸ ரூபங்களாகிய சுவாசக்கிரியைகளைத் தானுகச் செய்யமுடியாத ஜடமாயுமிருக்கிற பிராணனுனது, பிர்ம்மத்தைத் தெரிந்துகொள்ளமாட்டாது. சைதந்நியஸ்வரூபமாயிருக்கிற எந்த வஸ்துவினுல் இந்தப்பிராணுதிகளெல்லாம் சேஷ்டையை யுடைத்தானவைகளாயிருக்கின்றனவோ, அதுவே பிர்ம்மமென்றும், ஞாதுரு, ஞான, ஞேய பேதங்களுடன் சகுணமாக உபாஸிக்கப்படுகிறது இந்தப்பிர்ம்மமல்லவென்றுந் தெரிந்துகொள். எந்த வஸ்துவானது சர்வாந்தரியாமியாயும், ஸ்வப்பிரகாசத்தை யுடையதாயும், எல்லாவற்றையும் தன்தன் வியாபாரங்களில் பிரவிர்த்திக்கிறதற்கு ஹேதுவாயுமிருந்து பிரேரணை செய்கிறதோ, அதுவே ஸர்வபரிபூர்ணமான பிர்ம்மமென்றும், அப்படிப்பட்ட பிர்ம்மம் ஒன்றே "இதம்", இதுவென்ற சப்தத்திற்கு விஷய மாகாதென்றும், அறிவிப்பதற்காக, இந்த முதல்கண்டம் நான்காவது மந்திரம்முதல் இந்த மந்திரம் வரைக்கும்உள்ள, பிரதி மந்திரத்திலும், "ஏவ" அதுவே, என்கிற பதமானது உபயோகிக்கப்பட்டிருக்கிறதென்று தெரிந்துகொள்.

இந்த மந்திரத்தில் பிராணனானது க்⁴ராணேந்திரியத்தின் (மூக்கின்) வழியாய் சுவாசங்களை விடுகிறதும் கொள்ளுகிறதுமா யுள்ளதென்று, அறிவிக்கப்பட்டது

ஞானேந்திரியங்கள் ஐந்திற்கும், கர்மேந்திரியங்கள் ஐந்திற்கும், அந்தக்கரணம் ஐந்திற்குமுள்ள அத்தியாத்மம், (சுபாவமாயுள்ளது) அதிபூதம் (பஞ்சபூதங்களின் அம்சம்) அதிதெய்வம் (கிரியை நடக்கிறதற்குச் சாதனமாயுள்ளதெய்வம்) ஆகிய இம்மூன்றும் பிரதி இந்திரியங்களுக்கு முண்டு.

அவற்றுள் சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, ஜிஹ்வை, க்⁴ராணம் ஆகிய ஞானேந்திரியங்களின் விவரமாவன:—

ஶ்லோ॥ ஶ்ரோத்ரமத்⁴யாத்மமித்யுக்தம்
ஶ்ரோதவ்யம் ஶப்³த³லக்ஷணம்।
அதி⁴பூ⁴தம் ததி³த்யுக்தம்
தி³ஶஸ்தத்ராதி⁴தை³வதம்॥ ௧௪॥

சுலோ ॥ ச்ரோத்ர மத்தியாத்ம மித்யுக்தம்
ச்ரோதவ்யம் சப்தலக்ஷணம்
அதிபூதம் ததித்யுக்தம் திச
ஸ்தத்ரா திதைவதம்॥ (௧௪)

ஶ்லோ॥ த்வக³த்⁴யாத்மமிதி ப்ரோக்தம்
ஸ்ப்ரஷ்டவ்யம் ஸ்பர்ஶலக்ஷணம்।
அதி⁴பூ⁴தம் ததி³த்யுக்தம்
வாயுஸ்தத்ராதி⁴தை³வதம்॥ ௧௫॥

சுலோ ॥ த்வக த்யாத்ம மிதிப்ரோக்தம்
ஸ்ப்ருஷ்டவ்யம் ஸ்பர்ஶ லக்ஷணம்।
அதிபூதம் ததித்யுத்தம்
வாயுஸ்தத்ராதி தைவதம்॥ (கரு)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌚𑌕𑍍𑌷𑍁𑌶𑍍𑌚𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂𑌰𑍂𑌪𑌲𑌕𑍍𑌷𑌣𑌂।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ கசா॥

சுலோ ॥ சக்ஷுரத்யாத்ம மித்யுக்தம்
த்ருஷ்டவ்யம் ரூபலக்ஷணம்।
அதிபூதம் ததித்யுக்தம்
ஆதித்யோத்ராதி தைவதம்॥ (கசா)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂𑌤𑌦𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌂
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌂।
𑌵𑌰𑍁𑌣𑍋𑌦𑍇𑌵𑌤𑌾𑌤𑌤𑍍𑌰
𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌯𑌾𑌮𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ கள॥

சுலோ ॥ ஜிஹ்வாத்யாத்மம் தயாஸ்வாத்யம்
அதிபூதம் ரஸாத்மகம்।
வருணோ தேவதா தத்ர
ஜிஹ்வாயா மதிதைவதம்॥ (கள)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌘𑍍𑌰𑌾𑌣𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑌿𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂
𑌘𑍍𑌰𑌾𑌤𑌵𑍍𑌯𑌂𑌗𑌨𑍍𑌧𑌲𑌕𑍍𑌷𑌣𑌂।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ கஅ॥

சுலோ || க்ராண மத்யாத்ம மித்யுக்தம்
க்ராதவ்யம் கந்தலக்ஷணம்
அதிபூதம் ததித்யுக்தம்
ப்ருதிவ்யத்ரா திதைவதம்|| (௧௮)

| (இ-ள்.) அத்தியாத்மம். | அதிபூதம். | அதிதைவம். |
|---|---|---|
| சுரோத்ரம் (காது) | ஆகாசத்தின் தேஜஸாம்சமான சப்தலக்ஷணம். | திக்கு. |
| த்வக்கு (மேல்தோல்) | வாயுவின் தேஜஸாம்சமான ஸ்பர்சலக்ஷணம். | வாயு. |
| சக்ஷுஸ் (கண்) | தேஜஸின் தேஜஸாம்சமான ரூபலக்ஷணம். | ஆதித்யன் (சூரியன்.) |
| ஜிஹ்வை (நாக்கு) | ஜலத்தின் தேஜஸாம்சமான ரஸலக்ஷணம். | வருணன். |
| க்ராணம்(மூக்கு) | பிருதிவியின் தேஜஸாம்சமான கந்தலக்ஷணம். (வாசனை) | பிருதிவி. |

வாக்கு, பாணி, பாத, பாயு, உபஸ்தங்களாகிய கர்மேந்திரியங்களின் விவரமாவது:—

𑌶𑍍𑌲𑍋॥ 𑌵𑌾𑌗𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂
𑌵𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌶𑌬𑍍𑌦𑌲𑌕𑍍𑌷𑌣𑌂।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌅𑌗𑍍𑌨𑌿𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௧௯॥

சுலோ || வாகத்யாத்ம மிதிப்ரோக்தம்
வக்தவ்யம் ஸப்தலக்ஷணம்|
அதிபூதம் ததித்யுக்தம்
அக்னிஸ்தத்ராதி தைதம்|| (௧௯)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌹𑌸𑍍𑌤𑌾𑌵𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌆𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌞𑍍𑌚𑌯𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௨௦॥

சுலோ || ஹஸ்தாவத்யாத்ம மித்யுக்தம்
ஆதாதவ்யஞ்ச யத்பவேத்|
அதிபூதம் ததித்யுக்தம்
இந்திரஸ்தத்ராதி தைவதம்|| (௨௦)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌪𑌾𑌦𑌾𑌵𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂𑌤𑌤𑍍𑌰𑌯𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௨௧॥

சுலோ || பாதாவத்யாத்ம மித்யுக்தம்
கன்தவ்யம் தத்ரயத்பவேத்||
அதிபூதம் ததித்யுக்தம்
விஷ்ணுஸ்தத்ராதி தைவதம்|| (௨௧)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌪𑌾𑌯𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂
𑌵𑌿𑌸𑌰𑍍𑌗𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌯𑍋𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌮𑌿𑌤𑍍𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௨௨॥

சுலோ || பாயுரிந்திரிய மத்யாத்மம்
விஸர்கஸ்தத்ர யோபவேத்।
அதிபூதம் ததித்யுக்தம்
ம்ருத்யுஸ்தத்ருதி தைவதம்|| (௨௨)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌉𑌪𑌸𑍍𑌥𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂
𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌕𑌾𑌰𑌣𑌂।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌅𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃॥ ௨௩॥

சுலோ || உபஸ்தேந்திரிய மத்தியாத்மம்
ஸ்திரியாத் யானந்த காரணம்।
அதிபூதம் ததித்யுக்தம்
அதிதைவம் ப்ரஜாபதிஃ|| (௨௩)

| (இ-ள்.) அத்தியாத்மம். | அதிபூதம். | அதிதைவம். |
|---|---|---|
| வாக்கு | ஆகாசத்தின் ஆகாசாம்சமான சப்தலக்ஷணம். | அக்கினி. |
| பாணி (கை) | தேஜஸின் ஆகாசாம்சமான தானப்பிரதி கிரகலக்ஷணம் (கொடுத்தல்வாங்கல்.) | இந்திரன். |
| பாதம் (கால்) | வாயுவின் ஆகாசாம்சமான கமன லக்ஷணம் (நடக்கை.) | விஷ்ணு. |

| | | |
|---|---|---|
| பாயு (மலத்துவாரம்) | பிருதிவியின் ஆகாசாம்சமான விஸர்கலக்ஷணம் (மலங்கழித்தல்.) | மிருத்யு. |
| உபஸ்தம் (ஜலத்துவாரம்.) | ஜலத்தின் ஆகாசாம்சமான ஆனந்த லக்ஷணம் (சம்போகக்கருவியும் துவாரமும்.) | பிரஜாபதி. |

𑌶𑍍𑌰𑍁॥ 𑌮𑌨𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂
𑌮𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌯𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌮𑍍॥ ௨௪॥

சுலோ ॥ மனோத்யாத்ம மிதிப்ரோக்தம்
மன்தவ்யம் தத்ரயத்பவேத்।
அதிபூதம் ததித்யுக்தம்
சந்திரஸ்தத்ராதி தைவதம்॥ (௨௪)

𑌶𑍍𑌰𑍁॥ 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌬𑍋𑌦𑍍𑌧𑌵𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌯𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌅𑌧𑌿𑌦𑍈𑌵𑌂 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌃॥ ௨௫॥

சுலோ ॥ புத்திரத்யாத்ம் மித்யுக்தம்
போத்தவ்யம் தத்ரயத்பவேத்।
அதிபூதம் ததித்யுக்தம்
அதிதைவம் ப்ருஹஸ்பதிஃ॥ (௨௫)

𑌶𑍍𑌰𑍁॥ 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑌥𑌾𑌽𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂
𑌅𑌹𑌂𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚।

𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌰𑍁𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௨௬॥

சுலோ ॥ அஹங்காரஸ்த தாத்யாத்மம்
அஹம்கர் தவ்யமேவச
அதிபூதம் ததித்யுக்தம்
ருத்ரஸ்தத் ராதிதைவதம்॥ (௨௬)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌚𑍇𑌤𑌵𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌯𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௨௭॥

சுலோ ॥ சித்தமத்யாத்ம மித்யுக்தம்
சின்தவ்யம் தத்ரயத்பவேத்।
அதிபூதம் ததித்யுக்தம்
க்ஷேத்ரக் ஞோத்ராதிதைவதம்॥ (௨௭)

𑌶𑍍𑌲𑍋॥ 𑌤𑌮𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂
𑌵𑌿𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰 𑌯𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍।
𑌅𑌧𑌿𑌭𑍂𑌤𑌂 𑌤𑌦𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂
𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌤𑌂॥ ௨௮॥

சுலோ ॥ தமோத்யாத்ம மிதிப்ரோக்தம்
விகாரஸ்தத்ர யோபவேத்।
அதிபூதம் ததித்யுக்தம்
ஈஸ்வரோத்ரா திதைவதம்॥ (௨௮)

| (இ-ள்.) அத்தியாத்மம். | அதிபூதம். | அதிதைவம். |
|---|---|---|
| மனது | வாயுவின் பிருதிவியாம்சமான மனனலக்ஷணம். | சந்திரன். |

| | | |
|---|---|---|
| புத்தி | தேஜஸின் பிருதிவியாம்சமான போதலக்ஷணம். | பிரஹஸ்பதி. |
| சித்தம் | ஜலத்தின் பிருதிவியாம்சமான சிந்தனலக்ஷணம். | க்ஷேத்ரக்ஞன். |
| அகங்காரம் | பிருதிவியின் பிருதிவியாம்சமான அஹம்கர்த்திருத்துவ லக்ஷணம். | ருத்திரன். |
| தமஃ | ஆகாசத்தின் பிருதிவியாம்சமான விகாரலக்ஷணம். | ஈச்வரன். |

இந்த பஞ்சீகரண விவரமானது, இந்த வியாக்கியான கர்த்தாவால் ரசியிக்கப்பட்டிருக்கிற "ஆத்ம போத தத்துவார்த்த தீபிகையில்" நன்றாய் வெளியிடப்பட் டிருக்கிறபடியால் அவ்விடத்தில் பார்த்துக் கொள்ளவும்.

மேற்சொன்ன சுலோகங்களெல்லாம் ஸ்ரீமத் பரமஹம்ஸ சுரேச்வராசாரியாரவர்களால் ரசியிக்கப்பட்டிருக்கிற பஞ்சீகரண வார்த்திகத்தி லிருக்கின்றன.

சாமவேதத்தின் தலவகாரோபநிஷத்தென்ற
கேநோபநிஷத்தின்
முதலாவதுகண்டம்-முற்றிற்று.

---

ஓம்தத்ஸத்.

ഓം തത് സത്

ബ്രഹ്മാർപ്പണം അസ്തു.

---

# இரண்டாவதுகண்டம்.

## முதலாவது மந்திரம்.

---

### அவதாரிகை.

முதலாவதுகண்டம் இரண்டாவது மந்திரத்தில், செவிக்குச் செவியென்றும், மனதிற்கு மனதென்றும், நான்காவது மந்திரத்தில், அறியப்பட்டதற்கும் அறியப்படாததற்கும் வேறானதென்றும், ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பதாவது மந்திரங்களில் வாக்கு, மனது, கண், செவி, பிராணன், இவைகளால் பிர்ம்மத்தைச் சொல்லவாவது, நினைக்கவாவது, பார்க்கவாவது, கேட்கவாவது அல்லது முகரவாவது முடியாதென்றும், எந்த வஸ்துவில்லாவிடில் இந்தவாக்கு முதலியவைகள் தங்கள் தங்கள் கிரியைகளைச் செய்யமாட்டாவோ அதுவே பிர்ம்மமென்றும், சொன்ன இவை முதலான வாக்கியங்களினால் ஆத்மஸ்வரூபமாகிய பிர்ம்ம லக்ஷணங்களை எல்லாம் கேட்டு, "எல்லாவற்றிற்கும் நானே ஆத்மாவாக இருக்கிறேன்" என்று நன்றாய்த் தெரிந்துகொண்டவனைப்போல நடனிக்கும் சிஷ்யனைப்பார்த்துக் குரு சொல்லுகிறதாவது:—

ஓ சிஷ்யனே! "நான் ஆத்மாவை (பிர்ம்மத்தை) நன்றாய்த் தெரிந்துகொண்டேன்" என்று நீ நினைத்துக் கொண்டிருக்கிற ஸ்திதி, எனக்கு மிகவும் சந்தோஷகரமாகவே இருக்கிறது. ஆனால் நீ பிர்ம்மத்தைத் தெரிந்துகொள்ளவேண்டிய விதமாய்த் தெரிந்துகொண்டனையோ அல்லவோ என்ற சந்தேகமாத்திரம் எனக்கு

நிவாரணமாகவில்லை! ஏனெனில், "நான் பிர்ம்மத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டேன்" என்ற உன்னுடைய எண்ணப்பிரகாரம் தெரிந்துகொள்ளுகிறவன், தெரியப்படும்வஸ்து, தெரிந்துகொள்ளும் கருவிஎன மூன்று பதார்த்தங்களில்லாமல் தெரிந்துகொள்ளுகிற தென்பது முடியாது. ஆகையால், "நான் பிர்ம்மத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டேன்" என்ற உன்னுடைய நினைவு நம்பத்தகுந்த தன்று. நீ அப்படிப்பட்ட ஸ்திதியை யடைவதற்காகத் தெரிந்துகொள்ளவேண்டிய பாகங்கள் பின்னும் சில உண்டு. அவைகளையும் உனக்குத் தெரியச்செய்கிறேன், தெரிந்துகொள்: எப்படி எனில்:—

1.

ஶ்ருதி॥ யதி³ மந்யஸே ஸுவேதே³தி த³ஹ்ரமேவாபி
நூநம் த்வம் வேத்த² ப்³ரஹ்மணோ ரூபம்।
யத³ஸ்ய த்வம் யத³ஸ்ய தே³வேஷ்வத² நு
மீமாம்ஸ்யமேவ தே மந்யே விதி³தம்॥ க॥

சுருதி || யதிமந்யஸேஸுவேதேதி தப்ரமேவாபி
நூநம் த்வம்வேத்த ப்ரும்மணோரூபம்।
யதஸ்யத்வம் யதஸ்ய தேவேஷ்வதநு
மீமாம்ஸ்யமேவ தேமந்யேவிதிதம் ||க||

(அஹம்)
அஹம் — நான்

ப்³ரஹ்ம
பிர்ம்ம — பிர்ம்மஸ்வரூபத்தை

| | |
|---|---|
| ஸுவெத, ஐதி<br>ஸுவேத, இதி | நன்ருய்த்தெரிந்துகொண்டேனென்று |
| க்ஷம<br>த்வம் | நீ |
| மந்யஸெ, யதி<br>மந்யஸே, யதி | நினைப்பாயேயாகில், |
| (தத்)<br>தத் | அது (அந்த நினைவு) |
| த ஹ்ரம், ஏவ, (பவதி)<br>தப்ரம், ஏவ, பவதி | அல்பமாகமுடியும். |
| அஸ்ய, ப்ரஹ்மணஃ<br>அஸ்ய, பிர்ம்மணஃ | (தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற) அந்த பிர்ம்மத்தினுடைய |
| யத், ரூபம்<br>யத், ரூபம் | எந்தரூபத்தை |
| த்வம்<br>த்வம் | (சிசுமுதல் கிழவன்வரையிலுள்ள இச் சரீரமாக) நீ |
| வெத்த, (இதி)<br>வேத்த, இதி | தெரிந்துகொண்டேனென்று |
| (மந்யஸெ, யதி)<br>மந்யஸே, யதி | நினைப்பாயேயாகில் |

(தஊவி)
ததபி — அதுவும்,

ஊஸ்ய
அஸ்ய — இந்தப் பிர்ம்மத்தினுடைய

யசு, (ரூ௱ம)
யத், ரூபம் — எந்தரூபத்தை

தெவெஷு
தேவேஷு — தேவதாரூபங்களில் (இந்திரன், அக்கினி முதலான தேவதாரூபங்களாயுள்ள கரசரணுதி அவயவங்களையுடைய சகுணரூபமாக)

வெஊ, (ஐதி)
வேத்த, இதி — தெரிந்துகொண்டேனென்று

(மநு)ஸெ, யதி)
மந்யஸே, யதி — நினைப்பாயாகில்

(தஊவி)
ததபி — அதுவும்,

(ஹுஉ, ஊவ)
தப்ரம், ஏவ — அல்பமாகமுடியும், என்பது

நூநம்
நூநம் — நிச்சயம்.

ஊயநு
அதநு — (அப்படியானல்) அதன்பிறகு (என்ன செய்யவேண்டுமெனில்)

(தத்)
தத் — அந்தப்பிர்ம்ம ஸ்வரூபமானது

தே, (த்வயா)
தே த்வயா — உனக்கு (உன்னால்)

மீமாம்ஸ்யம், ஏவ
மீமாம்ஸ்யம், ஏவ — (குருபதேசமூலமாய்) நன்றாய் விசாரணைசெய்து ஸ்வாநுபவத்தால் தெரிந்துகொள்ள வேண்டியதேயாம்.

(தத்)
தத் — (என்ற குருசொன்ன வாக்கியங்களைக் கேட்டு) அந்தப்பிர்ம்ம ஸ்வரூபமானது

விதிதம், (இதி)
விதிதம், இதி — ஸ்வாநுபவத்தால் தெரிந்துகொள்ளக் கூடியதாக

மந்யே
மந்யே — நினைக்கிறேன் (என்று சிடன் பதில் சொன்னான்.)

தாத்பரியம்.

"கேநேஷிதம்" "யார் பிரேரணைசெய்கிறார்" என்ற இவைமுதலியகேள்விகளை முதலாவதுகண்டத்திரைம்பத்தில் கேட்டசிடன், அதற்குவிடையாகச் சொன்ன குருவினுடைய வாக்கியங்களையெல்லாம் நன்றாய்க்கேட்டபிறகு "நான்பிர்ம்மத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டேன்," என்றனன்.

அப்பொழுது குரு சிடனிடத்திலே சந்தேகமுடையவராகி தன்னுடைய உபதேசத்தைச்சரியாய்ச் சிடன்

கிரகித்தானே அல்லவோ வென்பதைத் தெரிந்து கொள்ளும்பொருட்டு சீடனைக் குருகேட்கிறதாவது:-

"ஓ சீடனே" எந்தவஸ்து தெரிந்துகொள்ளப்படுமோ அது தெரிந்துகொண்டவனுக்கு விஷயமாகிவிடுமல்லவா? எப்படியெனில், "நான் புஸ்தகத்தைத் தெரிந்துகொண்டேன்" என்பதில் தான்வேறு புஸ்தகம் வேருகவும், புஸ்தகம் என்ருல் தெரிந்துகொள்ளப்பட்ட வஸ்துவாகவும் ஆகிவிடுமல்லவா? இதுவுமல்லாமல், ஒரு வஸ்துவைத் தெரிந்துகொள்ளுவதற்குத் தெரிந்துகொள்பவன், தெரிந்துகொள்ளப்படும்வஸ்து தெரிந்துகொள்ளும் கருவி என மூன்று பதார்த்தங்கள் அவசியமல்லவா? முதலாவது கண்டத்தின் இரண்டாவது மந்திரத்தின் மூலமாய் நீ என்ன தெரிந்துகொண்டிருக்கிருய்? அதை நன்ருய் நீ கவனித்திருப்பாயாகில், வாக்குக்கு வாக்காயும், செவிக்குச் செவியாயும், மனதிற்கு மனதாயும், கண்ணுக்குக் கண்ணுயும், பிராணனுக்குப் பிராணனுயுமிருக்கிற தெதுவோ, அதுவே பிர்ம்மமென்றல்லவா முடியும்? அப்படியானுல் மனதினுலும் இந்திரியங்களினுலும் தெரிந்துகொள்ள முடியாததெதுவோ அதுவே பிர்ம்மமென்றல்லவா சித்தாந்தமாயிற்று? பின்னும், நெருப்பானது இதரபதார்த்தங்களைப் பிரகாசிக்கச்செய்யும், தகித்தலையுஞ்செய்யும், இதரபதார்த்தங்களால் நெருப்பைப் பிரகாசிக்கச்செய்ய முடியாது, தகித்தலையுஞ் செய்யமுடியாது ஆகையால், பிர்ம்மவஸ்துவொன்றே எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்து தானும் பிரகாசிக்கும். பிர்ம்மத்தைப் பிரகாசிக்கச்செய்கிற வஸ்துக்

கள் எங்குமில்லையென்று முதல்கண்டத்தில் இதுவரைக்குமே உனக்குச்சொல்லி இருக்கிறேனல்லவா? அப்படியிருக்க ஒன்றிற்கும் விஷயமாகாத பிர்ம்மத்தை "நான் நன்ருய்த் தெரிந்துகொண்டேன்" என்று நீ சொல்லும் வார்த்தை பொய்யாகமுடிந்தது: ஆகையால், அவைகள் மிகவும் அல்பமானது (இழிவானது) அதினல் உன்வார்த்தைகள் நிந்திக்கத்தக்கவைகள். அத்யாத்மிக (நாமரூபங்களை யுடையவாவது அல்லது சரீரத்தையுடைய வஸ்து) அதிபௌதிக (பஞ்சபூதங்களின் அம்சத்தை யுடையவஸ்து) அதிதைவிக (எதாவது தேவதையை அதிஷ்டானமா யுடையவஸ்து) ங்களற்றதும், தேசகாலவஸ்து பரிச்சேதமற்றதுமான பிர்ம்மத்தை, பஞ்சபூதசேர்க்கையா லுண்டான ஞானகர்மேந்திரிய அந்தக்கரணங்களையுடைய இச்சரீரமாகவாவது, அல்லது சரீரியாகிய அவித்தியாபிரதிபிம்பிதனை ஜீவனுகவாவது, தெரிந்துகொண்டேனென்று சொல்வாயேயாகில் அவைகளும் நிந்திக்கத்தக்கவைகளேயாம்; அப்படிக்கல்லாமல் ஒருக்கால் இந்தப் பிர்ம்மத்தை மாயோபாதிகர்களான பிர்ம்ம விஷ்ணு உருத்திராதியர்க ளென்ருவது, அல்லது இந்திரன் அக்கினி முதலானதேவதா ஸ்ரூபமென்ருவது தெரிந்துகொண்டே னென்பாயாகில், அச்சொற்களும் நிந்திக்கத்தக்கவைகளேயாம். இந்த ஆத்மதத்துவமாகிய பிர்ம்மமானது சிலபேர்களுக்கு குருவையடைந்து உபதேசத்தைப் பெற்றபோது உள்ளபடி போதமாகும், சிலருக்கு விபரீதமாய் போதமாகும், பின்னும் சிலருக்குத் தெரிந்தும் தெரியாமலாய்விடும், மற்றும்

சிலருக்குப் போதப்படுகிறதேயில்லை. அதிகமாய்த் தர்க்கம் வாசித்தபேர்கள் இதை யடைகிறது மிகத்துர்லபம், இந்திரன் இந்தப் பிர்ம்மவித்தையை உபதேசிக்கப்பெற்றபோது அதாவது,

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ “𑌯𑌏𑌷𑍋𑌕𑍍𑌷𑌿𑌣𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌦𑍃𑌶𑍍𑌯
𑌤𑍇 𑌏𑌷 𑌆𑌤𑍍𑌮𑍇𑌤𑌿𑌹𑍋𑌵𑌾 𑌚𑍈𑌤𑌦𑍍
𑌮𑍃𑌤𑌮𑌭𑌯𑌮𑍇𑌤𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿”॥

(ஊா. IV. XV. 1.)

சுருதி || “யஏஷோக்ஷிணி புருஷோத்ருஶ்யதே ஏஷதஆத்மேதிஹோவா சைததம்ருத மபயமேதத்ப்ரும்மேதி” ||

(சாந்தோ. பிரபா. ச. கண்டம். கரு. வாக்-க.)

(இ-ம்.) ஓ தேவதைகளுக்கு ராஜனுன இந்திரனே! உன்னுடைய நேத்திரத்தின் மூலமாய் நீயே உன் எதிரே ஆகாயத்தில் பார்க்கிற சாயாபுருஷனே ஆத்மா. அதுவே அமிருதமானது, அதுவே அபயமானது, அதுவே பிர்ம்மம், (இது குரு வெளியிடவேண்டிய ரகசியம்.)

என்று முதலில் உபதேசத்தைப் பெற்றபோது தான் தனித்துச்சென்று ஏகாந்தமாய் அநுஷ்டித்தும் மனதிற்குப் பிடிபடாமல், குருவினிடம்வந்தான். குருவும் அநேகவிதமாய் வெளிப்படுத்தியும் இந்திரனுக்கு மனதில் படியவில்லை; அப்போது குருவானவர் சொன்னதாவது:—

“நீ இன்னும் குருகுலவாசஞ் செய்து மனதிலுள்ள கல்மிஷங்களெல்லாவற்றையும் நிவர்த்தித்துக்கொண்டுவா?” என்றனர் அதைக்கேட்ட இந்திரன் மிகவும் துக்கத்தையும் ஆவலையும் உடையவனுகி விடாமுயற்

சியுடன் குருகுலவாசஞ்செய்து இரண்டாந்தடவை குருவினிடம்போக அவர் முதற்சொன்ன வாக்கியத்தையே உபதேசித்தனர். அப்பொழுதும் இந்திரனுடைய மனதிற்பிடியவில்லை; குரு மறுபடியும் குருகுல வாசஞ் செய்யென் றனுப்பிவிட்டார். இவ்விதமாக இந்திரன் தன்னுடைய விடாமுயற்சியால் நான்காந் தடவையில் ஸ்வாநுபவத்தை யடைந்தானென்றும் உபநிடதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சத்குருவினால் உபதேசிக்கப்பட்டபோதிலும் அசம்பாவனை, சம்சயபாவனை, விபரீதபாவனை என்ற மூன்றுவித பாவனைகளாலும், 1 - வது ஜீவேஸ்வரபின்னபேதம், 2-வது ஜீவாத்மாக்க ளிடத்திலிருக்கிற கருத்திருத்துவாதி குணபேதங்கள் வாஸ்தவமா அல்லவா என்ற ஜீவாத்மாக்களின் பரஸ்பரபேதம், 3-வது ஸ்தூலசூக்ஷ்ம காரணமென்கிற மூன்று சரீரங்களுடன் கூடின ஜீவனானவன் சங்கியாகிறான் என்ற ஜீவஜடங்களின்பேதம், 4-வது ஜகத்காரண ரூபமான வஸ்துவிற்கு விகாரித்துவம் உண்டென்ற ஈசுரஜடங்களின்பேதம், 5 - வது காரணத்தைக்காட்டிலும் வேறாயிருக்கிற ஜகத்தினுடைய சத்தியத்துவமாகிய ஜடங்களின் ஒன்றிற்கொன்று பேதம் என ஐந்துவகையாயுள்ள பிரமைகளினாலும், குருபதேச வாக்கியங்களும் லக்ஷியங்களும் மனதிற்குப் பிடிபடாதாகையால் நன்றாய்க் குருகுலவாசஞ் செய்து அவருடைய வருதியின் (ஆஞ்ஞைப்படி) நடக்கிறதின் மூலமாய் சகல சந்தேகங்களும் நிவர்த்தியாய்விடும். பிற்பாடு தான் குருபதேச லக்ஷியத்தில் மனது நிற்கும் ஆகையால் "நான் பிர்ம்மத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டேன்" என்று நீ சொல்லும் வார்த்தையில்

எனக்குக் கொஞ்சமும் நம்பிக்கையில்லை ஏனெனில், இந்தப் பிர்ம்மத்தைச் சுருதிகளில்,

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌅𑌶𑌬𑍍𑌦𑌮𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑌮𑌰𑍂𑌪𑌮𑌵𑍍𑌯𑌯𑌂
𑌤𑌥𑌾𑌰𑌸𑌂𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌗𑌨𑍍𑌧𑌵𑌚𑍍𑌚𑌯𑌤𑍍॥

சுருதி || அசப்த மஸ்பர்ச மரூப மவ்யயம்
ததாரஸம் நீத்யமகந்தவச்சயத்||

(இ - ள்.) சுரோத்திரேந்திரியத்தினுலும், துவக்கேந்திரியத்தினுலும், நேத்திரேந்திரியத்தினுலும், ஜிஹ்வேந்திரியத்தினுலும், கிராணேந்திரியத்தினுலும், அந்தக் கரணத்தினுலும் தெரிந்துகொள்ள முடியாதென்றும், இவைகளெல்லாம் நசிக்கத்தக்கவைகள்.

பிர்ம்மமொன்றே நித்தியமானதென்றும், பின்னும் இப்பிர்ம்மத்தைச் சகல உபாதிகளற்றது, சாந்தமானது, நித்தியமானது, இரண்டற்றது, (அத்துவைதமானது) என்றும்,

𑌕𑌾𑌲𑌤𑍍𑌰𑌯𑌾𑌬𑌾𑌧𑌿𑌤𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥
காலத்ரயாபாதிதம்பிர்ம்ம ||
𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥
நிர்க்குணஸ்வரூபம்பிர்ம்ம ||
𑌆𑌦𑌿𑌮𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌶𑍂𑌨𑍍𑌯𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥
ஆதிமத்யாந்தசூன்யம்பிர்ம்ம ||
𑌸𑌰𑍍𑌵𑌂𑌖𑌲𑍍𑌵𑌿𑌦𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥
ஸர்வம்கல்பிதம்பிர்ம்ம ||
𑌮𑌾𑌯𑌾𑌤𑍀𑌤𑌂𑌗𑍁𑌣𑌾𑌤𑍀𑌤𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥
மாயாதீதம்குணதீதம்பிர்ம்ம ||

𑌅𑌨𑌨𑍍𑌤𑌮𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌮𑌖𑌣𑍍𑌡𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

அநன்தமப்ரமேயமகண்டபரிபூர்ணம்பிர்ம்ம ||

𑌅𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌪𑌰𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌶𑍁𑌦𑍍𑌧𑌬𑍁𑌦𑍍𑌧𑌮𑍁𑌕𑍍𑌤𑌸𑌤𑍍𑌯𑌸𑍍𑌵
𑌰𑍂𑌪𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑌿𑌨𑍍𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

அத்விதீயபரமானந்தசுத்தபுத்தமுக்தஸத்யஸ்வரூப
வ்யாபகா உ பின்னஅபரிச்சிந்நம்பிர்ம்ம ||

𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

ஸத்யம்ஞாநமனன்தம்பிர்ம்ம ||

𑌸𑌚𑍍𑌚𑌿𑌦𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

ஸச்சிதாநந்தஸ்வப்பிரகாசம்பிர்ம்ம ||

𑌮𑌨𑍋𑌵𑌾𑌚𑌾𑌮𑌗𑍋𑌚𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

மநோவாசாமகோசரம்பிர்ம்ம ||

𑌅𑌮𑌿𑌤𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

அமிதவேதாந்தவேத்யம்பிர்ம்ம ||

𑌦𑍇𑌶𑌕𑌾𑌲𑌵𑌸𑍍𑌤𑍁𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌰𑌹𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

தேசகாலவஸ்துபரிச்சேதரஹிதம்பிர்ம்ம ||

𑌸𑌰𑍍𑌵𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

ஸர்வபரிபூர்ணம்பிர்ம்ம ||

𑌤𑍁𑌰𑍀𑌯𑌂 𑌨𑌿𑌰𑌾𑌕𑌾𑌰𑌮𑍇𑌕𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

துரீயம்நிராகாரமேகம்பிர்ம்ம ||

𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌚𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

அத்வைதமநிர்வாச்யம்பிர்ம்ம ||

𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌤𑍍𑌮𑌕𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

ப்ரணவாத்மகம்பிர்ம்ம ||

𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

ப்ரக்ஞானம்பிர்ம்ம ||

𑌅𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

அயமாத்மாபிர்ம்ம ||

𑌸𑌰𑍍𑌵𑌂𑌸𑌤𑍍𑌯𑌂𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

ஸர்வம்ஸ்த்யம்பரம்பிர்ம்ம ||

என்றும், சுருதிகள்கோஷிக்கிறபடியால் அப்படிப்பட்ட பிர்ம்மத்தை தெரிந்துகொள்வது மிகவும் துர்லபம். ஆகையால் நீ சத்குருவையடைந்து பிர்ம்மவிசாரம் செய்யவேண்டிய தவசியம் என்று குருசொன்ன வாக்கியங்களின் ஸாராம்சத்தை நன்ருய்ச்சீடன் தெரிந்துகொண்டு, தான் ஏகாந்தஸ்தலத்திற்சென்று ஸ்திராஸனத்தில் உட்கார்ந்துகொண்டு, மனதை விஷயங்களிலிருந்து திருப்பி குருவினுலுபதேசிக்கட்ட பிரதியம்சங்களையும் நன்ருய் மனனஞ்செய்து நிதித்தியாசத்தினுல் சகல சந்தேகங்களையும் போக்கடித்து நிரந்த சத்திருப்தியை யடைந்த மனமானது லயத்தையடைந்து ஸ்வாநுபவத்தைப்பெற்றுப் பிர்ம்மானந்தத்தை யநுபவித்து புனருத்தாரணமானபோது அதாவது நிஷ்டைகலேந்தபோது சீடன் குருவினிடத்திற்சென்று "ஓ சுவாமீ! பிர்ம்மஸ்வரூபமானது ஸ்வாநுபவத்தினுலேயே அடையத்தக்கது" என்று சொன்னுன்.

அஸம்பாவனை, சமுசபாவனை, விபரீதபாவனைகளின் விபரம்:—

வேதாந்த வாக்கியங்கள் அத்துவிதீயப் பிர்ம்மத்தின்கண்ணே பிரமாணமாகவுண்டோ இல்லையோ? என்பது அஸம்பாவனை எனப்படும்.

ஆன்மசமுசயம், அநான்மசமுச்யமென சமுசயபாவனை இருவகைத்து. அநான்மசமுசயம் அளவிறந்தது; அவற்றை விரிப்பதால் பயனிலலை, ஆன்மசமுசயமும் அநேகமாம், அவைகளில் முக்கியமானவைகளை மாத்திரம் சொல்லப்படும் அவைகளாவன:—

ஜீவன் பிர்ம்மத்தோடு அபின்னமோ? அல்லது பின்னமோ? அபின்னமானாலும் எப்போதும் அபின்னமோ அல்லது மோக்ஷகாலத்தில் மாத்திரந்தான் அபின்னமோ? எப்போதும் அபின்னமானாலும் ஆனந்தாதி ஐஸ்வர்யவானோ அல்லது ஆநந்தாதிகளற்றவனோ? ஆநந்தாதிகளற்றவனானாலும் ஆநந்தாதிகள் குணமோ அல்லது சொரூபமோ? என இவை முதலான தத்பதத்திற்கு அபின்னமான துவம்பதார்த்தனான ஜீவனாகிய ஆன்மாவைக்குறித்த சமுசயங்களாம்.

பின்னும், ஆன்மா (ஜீவன்) தேகாதிகளின் பின்னமோ அல்லது அபின்னமோ? பின்னமானாலும் அணுரூபமோ? அல்லது மத்திமபரிமாணரூபமோ, விபுப்பரிமாணரூபமோ? விபுப்பரிமாணமெனினும் கர்த்தாவோ, அகர்த்தாவோ? அகர்த்தாவெனினும் பரஸ்பரபின்னமாக அநேகமோ அல்லது ஏகமோ? என

வும் அப்படியே தத்பதார்த்த வஸ்துவினிடத்திலு முண்டாகுஞ் சமுசயங்களாவன:—

பகவான் (பிர்ம்மமானது) வைகுண்டாதி லோகவிசேஷத்தில் வசிக்கும் பரிச்சின்ன அஸ்தபாதாதி அவயவங்களோடு கூடிய சரீரியோ அல்லது சரீரமற்ற விபுவோ? சரீரமற்ற விபுவாயினும் ஜகதுற்பத்திக்கு பரமாணுவாதிகளை அபேக்ஷித்த கர்த்தாவோ அல்லது அபேக்ஷியாத கர்த்தாவோ? பரமாணுவாதிகளை அபேக்ஷியாத கர்த்தாவெனினும் கேவலம் கர்த்தாவோ? அல்லது அபின்ன நிமித்தோபாதானரூப கர்த்தாவோ? அபின்ன நிமித்தோபாதானரூப கர்த்தாவெனினும் பிராணிகளின் கர்ம்மங்களை அபேக்ஷியாத கர்த்தாவாய் பிராணிகளை அனேக பாபகாரியங்களுக்குட்படுத்தும் விஷமகிருத்தியங்களைச் செய்யும் தோஷமுடையவனு? அல்லது பிராணிகளின் கர்ம்மங்களுக்குத் தக்கபடி தத்தத்பலங்களை விபஜிக்கிற கர்த்தாவான தோஷரகிதனு? என உண்டான இவை முதலிய சமுசயங்களையே சமசயபாவனை எனப்படும்.

குருகுல வாசஞ்செய்யுங் காலையில் குருவானவர் தனக்கு நிஜத்தைச் சொல்லவில்லையென்றும், குருவென்னத்திற்கு நல்ல நல்ல கிரந்தங்களை நாமே வாசித்துக்கொண்டு அந்தப்படி அப்பியாசஞ்செய்தால் தனக்குத்தானே ஞானமுண்டாய்விடும். ஆகையால், குரு அநாவசியமென்றும் நம்மைக்காட்டிலும் குருவுக்கென்ன அதிகமாய்த்தெரியும் எல்லாம் நமக்குத் தெரிந்தவைகளையே அவரும் சொல்லுகிருர் என்றும்

அவர் சொல்லும் வாக்கியங்களின்பேரில் விசுவாசமி ல்லாதவனுகி இருக்கும் சிட்னுடைய மனேஸ்திதியே விபரீதபாவனை எனப்படும்.

ஐந்துப் பிரமைகளின் விவரமாவது:—

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌭𑍍𑌰𑌮𑌃𑌪𑌞𑍍𑌚𑌵𑌿𑌧𑍋𑌭𑌾𑌤𑌿
𑌤𑌦𑍇𑌵𑍇𑌹𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇।
𑌜𑍀𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑍌𑌭𑌿𑌨𑍍𑌨𑌰𑍂𑌪𑌾
𑌵𑌿𑌤𑌿𑌪𑍍𑌰𑌾𑌥𑌮𑌿𑌕𑍋𑌭𑍍𑌰𑌮𑌃॥ க॥

சுருதி ॥ ப்ரமஃபஞ்சவிதோபாதி
ததேவேஹஸமுச்யதே।
ஜீவேஶ்வரௌபின்னரூபா
விதிப்ராதமிகோப்ரமஃ॥ க॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿𑌷𑍍𑌠𑌂𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂
𑌵𑌾𑌸𑍍𑌤𑌵𑌂𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌕𑌃।
𑌶𑌰𑍀𑌰𑌤𑍍𑌰𑌯𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤
𑌜𑍀𑌵𑌸𑌙𑍍𑌗𑍀𑌤𑍃𑌤𑍀𑌯𑌕𑌃॥ உ॥

சுருதி ॥ ஆத்மநிஷ்டம்கர்த்ருகுணம்
வாஸ்தவம்வாத்விதீயகஃ।
சரீரத்ரயஸம்யுக்த
ஜீவஸ்ஸங்கித்ரிதீயகஃ॥ உ॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌜𑌗𑌤𑍍𑌕𑌾𑌰𑌣𑌰𑍂𑌪𑌸𑍍𑌯
𑌵𑌿𑌕𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌂𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌕𑌃।
𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍𑌭𑌿𑌨𑍍𑌨𑌜𑌗𑌤𑌃
𑌸𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂𑌪𑌞𑍍𑌚𑌮𑍋𑌭𑍍𑌰𑌮𑌃॥ ௩॥

சுருதி || ஜகத்காரணரூபஸ்ய
விகாரித்வம்சதுர்த்தக:।
காரணாத்பின்னஜகத்
ஸத்யத்வம்பசமோப்ரம:॥ ௩॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌬𑌿𑌂𑌬𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌂𑌬𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨
𑌭𑍇𑌦𑌭𑍍𑌰𑌮𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃।
𑌸𑍍𑌫𑌟𑌿𑌕𑌲𑍋𑌹𑌿𑌤𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨
𑌪𑌾𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌿𑌕𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌭𑍍𑌰𑌮𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃॥ ௪॥

சுருதி || பிம்பப்ரதிபிம்பதர்சநேந
பேதப்ரமோநிவ்ருத்த:।
ஸ்படிகலோஹிததர்சநேந
பாரமார்திககர்த்ருத்வப்ரமோநிவ்ருத்த:॥ ௪॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌘𑌟𑌮𑌠𑌾𑌕𑌾𑌶𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨
𑌸𑌙𑍍𑌗𑌿𑌤𑍍𑌵𑌭𑍍𑌰𑌮𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃
𑌕𑌨𑌕𑌰𑍁𑌚𑌕𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨
𑌵𑌿𑌕𑌾𑌰𑌿𑌤𑍍𑌵𑌭𑍍𑌰𑌮𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃। ௫।

சுருதி || கடமடாகாசதர்சநேந
ஸங்கித்ப்ரமோநிவ்ருத்த:॥
கநகருசகதர்சநேந
விகாரித்வப்ரமோநிவ்ருத்த:॥ ௫॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ 𑌰𑌜𑍍𑌜𑍁𑌸𑌰𑍍𑌪𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨
𑌕𑌾𑌰𑌣𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌜𑌗𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌭𑍍𑌰𑌮𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌿𑌤𑌃॥

சுருதி || ரஜ்ஜுஸர்பதர்சநேந
காரணாத்பின்னஜகத் ஸத்யத்வப்ரமோநிவ்ருத்த॥

(இ-ள்.) ப்ரமை (𑌭𑍍𑌰மை) ஐந்துவிதங்களா யுள்ளதென்று சொல்லப்படும்.

1 - வது. அதில், ஜீவன் வேறு ஈசுரன் வேறு என்று சொல்வது, முதலாவது ப்ரமையாம். இந்தப்ரமை எப்படிப் போகுமெனில், "பிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தின் அநுபவத்தாற்போகும், அதாவது, அநேக துண்டுகளாக உடைய ஒரு பெரியகண்ணாடியின் எதிரில் ஒரு மனிதன் நிற்பானாகில், தான் ஒருவனே அநேக பிம்பங்களாகத் தோன்றுவன். அப்படித் தோன்றினபோதிலும் தோன்றும் பிம்பங்கள் தன்னைத்தவிர வேறல்லவென்பது சத்தியம். அப்படியே, அவன் உடையாத கண்ணாடியின் எதிரில் நின்றால் ஒரு பிரதிபிம்பம் மாத்திரம் தோன்றும். அதுவும் தன்னைத்தவிர் வேறல்லவென்பதும் சத்தியம். அதுபோல, அவிவேகமென்கிற பூமியில்விழுந்து, அநேக, சங்கல்ப்ப, விகற்பங்களென்றும் உடைந்த துண்டுகளையுடைய அந்தக்கரணமாகிய கண்ணாடியை யுடையவனுக்கு பதார்த்த பேதங்களாகிய பிம்பங்கள் அநேகம் தோன்றும். அவிவேக பூமியில் விழுந்துடையாமல், ஞானமாகிய ஸ்திதியிலேயிருக்கிற சங்கல்ப்ப விகற்பங்க ளென்றதுண்டுகளற்ற அந்தக்கரணமாகிய உடையாதகண்ணாடியை யுடையவனுக்கு பதார்த்தபேதமற்ற ஒரு பிம்பமேதோன்றும். அதுவும் தன்னைத்தவிர வேறல்லவென்றும், தோன்றும் பிம்பம் சத்தியமல்லவென்றும், தான் ஒருவனே சத்தியமென்றும் சமுசய மற்றிருப்பவனைப் போல, காணப்படுகிற இவைகளெல்லாம் சங்கல்ப விகற்பங்களையுடைய அந்தக்கரணமாகிய (அவிவேகபூமியில் விழுந்துடைந்து பின்னங்களாகவிருக்கிற) கண்ணாடியினுடைய தோற்றமே என்றும், சகலசந்தேகங்களையும் போக்கடிக்கும் சத்குருவி னுபதேசத்தால், ஜீவன் வேறு ஈஸ்வரன் வேறு என்ற இந்தப்ரமை நிவர்த்தியாகும்.

உ - வது. வாக்குக்கு வாக்காயிருந்து பேசுகிறேனென்பதும் கண்ணுக்குக் கண்ணாயிருந்து பார்க்கிறே னென்பதும் இவைமுதலான கர்த்திருத்துவாதி குணங்கள் ஆத்மாவாகிய பிர்ம்மத்தினிடத்தில் காணப்படுகிறபடியால், பிர்ம்மத்தை

அகர்த்தா அபோக்தாவென்று சொல்லுவதெப்படி என்றப்ரமை இரண்டாவது. இது, "ஸ்படிகலோஹித" திருஷ்டாந்தத்தின் அநுபவத்தால் போகும். எப்படியெனில்:—

சிவப்புச் சேலையை ஒரு ஸ்படிகச்சிலையின் சமீபத்தில் கட்டினால் அந்த ஸ்படிகச்சிலை தன்னுடைய சுவச்சமான வெண்மை நிறத்தைவிட்டு சிவந்தநிறத்தை யுடையதாய்விடும். ஆனால் அச்சிவப்புநிறம் அதன் சுபாவமான நிறமுமல்ல அந்நிறமானது அச்சிலையில் இல்லை. தோற்றமாத்திரமே. அந்நிறத்தைப் போக்கவேண்டி அச்சிலையை நன்றாய்த்தேய்த்து விளக்கினாலும் போகாது. அல்லது சாணைபிடித்தாலும் போகாது. அல்லது பொடிப் பொடியாய் உடைத்தாலும் போகாது. அச்சிலையின் சமீபத்திலுள்ள வர்ணச்சேலையை நீக்கிவிட்டால் அச்சிலையில் தோன்றின நிறம்போய்விடும். அங்ஙனம் நீக்காமையால் அந்நிறம் அந்த ஸ்படிகச்சிலையை நிஜமாக பாதிக்கவுமாட்டாது. தோற்றமாத்திரமாயிருக்கும். அத்தோற்றமும் தாத்காலிகமேயாம். அப்படிப்போலவும், சுயமாக சுடுகிற குணத்தை யுடைத்தாயிருக்காத இரும்பானது நெருப்பைச் சமீபித்தால் ததாகாரமாகி அவ்வாகார குணத்தினால் தன்னைச் சமீபிக்கும் பதார்த்தங்களைக்கூடச் சுட்டுவிடும். ஆகிலும் அக்குணமும் (ரூபம்) இரும்பினுடைய சுபாவமல்ல இதுபோலவும் நித்திய சுத்த புத்த சத்திய பரிபூரண ஸ்வபாவத்தையுடைய பிர்ம்மமானது அசுத்த பதார்த்தங்களின் சாமீபத்தினால் தத்ததாகார குணதிகளை யுடைத்தானாற்போல தாத்காலிகமாய்க் காணப்படுகிறதேயல்லாமல் கர்த்திருத்துவ போக்த்திருத்துவாதிகள், பிர்ம்மத்தினிடத்தில் வாஸ்தவமாயில்லை என்று சத்குருபதேசத்தால் ஆத்மாவாகிய பிர்ம்மத்தினிடத்தில் தோற்றும் கர்த்திருத்துவாதி ப்ரமை நிவர்த்தியாகும்.

3 - வது. ஸ்தூல சூக்ஷ்மகாரண சரீரங்களை யுடைத்தாயிருக்கிற ஆத்மாவாகிய ஜீவனானவன் அஸங்கனல்ல ஸங்கி

யே என்கிறது மூன்றாவது ப்ரமை எனப்படும். இந்த ப்ரமை யானது, "கடமடாகாசாதி" திருஷ்டாந்த ஸ்வாநுபவத்தி னால் நிவர்த்தியாகும் அஃதெப்படியெனில்:—

கடாகாச மடாகாசாதி நாமரூபங்களை உடைத்தாயிருக்கிற ஆகாசமானது சகலத்திலும் வியாபித்து, எங்கும் நிறைந்த தாயிருந்தபோதிலும், ஒன்றினாலும் பாதிக்கப்படாமலிருக் கிறதுபோல, ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களில் உபாதி சம் பந்தத்தினால் நாமரூபங்களை யுடைத்தாயிருக்கிற ஜீவனெனகின் றபேரையுடைய பிர்ம்மமானது எல்லாவற்றிலும் நிறைந்து எங்கும் வியாபித்திருப்பதினால் ஸங்கத்தை யடைந்திருப்ப தாகத்தோன்றினும், ஸங்கீ என்று சொல்லக்கூடாது. அச்ச ங்கமானது இந்தப் பிர்ம்மத்தைப் பாதிக்கமாட்டாது. ஆகை யால் பிர்ம்மமாகிய ஜீவன் சங்கியல்ல, அசங்கனே என்று குருபதேசத்தால், ஜீவன் சங்கி என்கிற ப்ரமை நிவர்த்தி யாகும்.

4-வது. ஜகத்முதலியன உண்டாவதற்குப் பிர்ம்மத்தைத் தவிர, வேறொரு பதார்த்தங்காரணமாகச் சொல்லப்படா மையால், பிர்ம்மத்தினிடத்திலேயே, ஜகத்விகார ஸ்திதி யிருக்கிறது. என்பது நான்காவது ப்ரமை எனப்படும். இது, "கநகருச" திருஷ்டாந்த ஸ்வாநுபவத்தால் நிவர்த் தியாகும். எப்படியெனில்: — தங்கமானது அநேக நாம ரூபங்களையுடைய நகைகளானபோதிலும், தங்கத்திற்கு எப் படி ஹாநி இல்லையோ, நகைகளாகிய பேர்களும் ரூபங்களும் போனபோதிலும் (அழிந்தபோதிலும்) தங்கமாத்திரம் எப் படி அழியாதோ, அப்படிப் பிர்ம்மமானது அநேகபேர்களையு ம் ரூபங்களையும் உடைத்தாயிருந்தபோதிலும் பிர்ம்மத்திற்கு பாதகாரமில்லை. இந்தப்பேர்களும் ரூபங்களும் அழிந்தபோ திலும், பிர்ம்மமாத்திரம் அழியாது என்ற குருபதேச ஸ்வா நுபவத்தால் பிர்ம்மமானது ஜகத்விகாரத்தை யடைந்திருக் கிறது என்று சொல்லுகிற ப்ரமை நிவர்த்தியாகும்.

5-வது. காரணத்தைப்பார்க்கிலும் பின்னமாயிருக்கிற ஜகத்து சத்தியமாகவேயிருக்கிறதென்பது, ஐந்தாவது ப்ரமை. இந்த ப்ரமையானது, "ரஜ்ஜு-சர்ப்ப" திருஷ்டாந்தத்தின், ஸ்வாநுபவத்தால் நிவர்த்தியாகும். எப்படியெனில்:—

காரணமாகிய ஒரு வெண்மையானகயிற்றை, சாய்ங்காலவேளையில் வேறுவேறுதிக்குகளிலிருந்து தூரமாகநின்றுபார்த்த மூன்றுபேர்களில், ஒருவனுக்குப்பாம்பாகவும், மற்றொருவனுக்கு வெள்ளி அறைநாணாகவும், வேறொருவனுக்குக் கெடியாரச் சங்கிலியாகவும் தோன்றிய வெவ்வேறு தோற்றமானது, காரணமாகிய கயிற்றைப்பார்க்கிலும் வேறாகத்தோன்றினபோதிலும், அம்மூவர்களும் சமீபத்தில்வந்து பார்த்தபொழுது வெவ்வேறாகத் தோன்றின தோற்றங்கள் நசித்து அசத்திய பதார்த்தங்களாயின. நிஜமாகிய வெள்ளைக்கயிறே மூன்று காலத்திலும் சத்தியமாகவே நின்றது. அப்படியே சாய்ங்காலமாகிய அவிவேக ஸ்திதியில், விசாரணையற்ற ஸ்திதியாகிய தூரத்திலிருந்துபார்க்கையில், காரணமாகிய பிர்ம்மத்திற்குப்பின்னமாகத் தோற்றுகிற இச்சகமானது சத்தியம்போலத் தோற்றுகிறது. குருவாக்கிய விசாரணையால் சமீபித்து பிரக்ஞானம் என்கிற தீபத்தையும் கைக்கொண்டு ஸ்வாநுபவத்தால் பார்க்கும்போது, பின்னமாக நாநாவிதமாய் தோன்றின ஜகத்து நசித்து அசத்தியமாகிவிடும். பிர்ம்மமொன்றே சத்தியமாய் நிற்குமென்று குருபதேசத்தால் அடைந்த ஸ்வாநுபவத்தினால், காரணத்தைக் காட்டிலும், பின்னமாகத்தோன்றும் ஜகத்து சத்தியத்துவ ப்ரமை நிவர்த்தியாகும்.

ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரத்திரயங்களும் அவித்தையினு லுண்டானவைகளென்பதற்கும், பிர்ம்மமானது இவைகளுக்கு விலக்ஷணமான தென்பதற்கும், பிரமாணம்.

𑌶𑍍𑌲𑍋॥ 𑌆𑌵𑌿𑌦𑍍𑌯𑌕𑌂𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑌿
𑌦𑍃𑌶𑍍𑌯𑌂𑌬𑍁𑌦𑍍𑌬𑍁𑌦𑌵𑌤𑍍𑌕𑍍𑌷𑌰𑌮𑍍।
𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦
𑌅𑌹𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌮𑍍॥ ௩௦॥

சுலோ|| ஆவித்யகம்ஶரீராதி
த்ருச்யம்புத்புதவத்க்ஷரம்|
ஏதத்விலக்ஷணம்வித்யாத்
அஹம்ப்ரும்மேதிநிர்மலம்|| (௩௦)

பிர்ம்மமானது இந்திரியங்களினுடைய சம்பந்தமற்றதென்பதற்கு,

𑌶𑍍𑌲𑍋॥ 𑌶𑌬𑍍𑌦𑌾𑌦𑌿𑌵𑌿𑌷𑌯𑍈𑌸𑍍𑌸𑌂𑌗𑍋
𑌨𑌿𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌤𑌯𑌾𑌨𑌿𑌶॥ ௩௧॥

சுலோ|| சப்தாதிவிஷயைஸ்ஸங்கோ
நிரிந்திரியதயாநிச|| (௩௧)

பிர்ம்மமானது மனது, பிராணன் முதலியவைகளற்றது என்பதற்கு:—

𑌶𑍍𑌲𑍋॥ [illegible]
[illegible]।
[illegible]
[illegible]॥ ௩௨॥

சுலோ|| அமநஸ்த்வாந்நமேதுக்க
ராகத்வேஷபயாதய:|
அப்ராணோஹ்யமநாசுத்த
இத்யாதிச்ருதிசாஸநாத்|| (௩௨)

பிர்மமானது ஆகாசத்தைப்போல நிஸ்ஸங்கமான தென்பதற்கு:—

𑌶𑍍𑌲𑍋॥ 𑌅𑌹𑌮𑌾𑌕𑌾𑌶𑌵𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌂
𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌰𑍍𑌗𑌤𑍋𑌚𑍍𑌯𑌤𑌃।
𑌸𑌦𑌾𑌸𑌰𑍍𑌵𑌸𑌮𑌃𑌸𑌿𑌦𑍍𑌧𑍋
𑌨𑌿𑌃𑌸𑌙𑍍𑌗𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑍋𑌚𑌲𑌃॥ ௩௪

சுலோ|| அஹமாகாசவத்ஸர்வம்
பஹிரந்தர்கதோஅச்யுத:|
ஸதாஸர்வஸமஃஸித்தோ
நிஸ்ஸங்கோநிர்மலோஅசல:|| (௩௪)

இந்தச் சுலோகங்களின் விவரத்தை இந்த வியாக்கியான கர்த்தாவால் ரசியிக்கப்பட்டிருக்கிற "ஆத்மபோத தத்துவார்த்தீபிகை;'யின் ௩0, ௩௧, ௩௨, ௩௪-வது சுலோகங்களில் பார்க்கவும்.

## இரண்டாவது மந்திரம்.

அவதாரிகை.

சீடனே! ஸ்வாநுபவத்தினால் அப்பிர்ம்மத்தைத் தெரிந்துகொள்ளலாமென்று நீ இந்தக் கண்டத்தின் முதல்மந்திரத்தில் சொன்னவார்த்தையானது என் மனதுக்குப் பிடிபடவில்லை. அதை நன்றாய்விளக்கிச் சொல்லவேண்டுமென்று சொன்ன குருவைப்பார்த்துச் சீடன் சொல்லுகிறதாவது:—

2.

ஶ்ருதி॥ நாஹம்மந்யே ஸுவேதேதி
நோ நவேதேதி வேதச।
யோ நஸ்தத்வேத தத்வேத
நோ நவேதேதி வேதச॥ உ॥

சுருதி|| நாஹம் மந்யே ஸுவேதேதி
நோநவே தேதிவேதச
யோநஸ்தத் வேததத்வேத
நோநவேதேதி வேதச|| (உ)

அஹம் / அஹம் — நான்

(தத்) / தத் — அந்த பிர்ம்மத்தை

ஸுவேத, இதி / ஸுவேத, இதி — நன்றாய்த் தெரிந்துகொண்டேனென்று

| | |
|---|---|
| ந, ஶமெ௩ு)<br>நமந்யே | நினைக்கவில்லை; (என்றால், பிர்ம்மமானது தெரிந்து கொள்ளுகிற தற்கு மிகவும் (கஷ்டமானது) |
| ந, வெஃ, ஊ தி<br>ந, வேத, இதி | தெரிந்துகொள்ளவில்லையென்றும் |
| நொ, (ஶமெ௩ு))<br>நோ, மந்யே | நினைக்கவில்லை. |
| உ<br>ச | பின்னை என்னை யெனில் |
| வெஃ, (ஊ.தி, ஶமெ௩ு))<br>வேத, இத, மந்யே | (சாஸ்திரங்களினாலும் முக்கியமாய்க் குருபதேசத்தினாலும் நன்றாய் விசாரணைசெய்து சகல சந்தேகங்களற்ற சகலபேதசூன்ய சாக்ஷாத்காரமானஸ்வாநுபவத்தினால்) தெரிந்து கொண்டேன் (என்று நினைக்கிறேன்.) |
| நொ,ந,வெஃ, ஊ.தி,வெஃ,உ<br>நோ-ந-வேத இதி-வேத-ச | தெரிந்துகொள்ள வில்லையென்றும் நினைக்கவில்லை சுவாநுபவத்தினால் தெரிந்துகொண்டேனென்று நினைக்கிறேன்; எனச்சொன்ன |
| தஃ<br>தத் | அந்த (என்னுடைய அபிப்பிராயத்தை) |
| நஃ<br>நஃ | (பிர்ம்மவிசாரணை செய்யக்கூடிய) சாமர்த்தியத்தையுடைய எங்களில் |
| யஃ<br>யஃ | எவன் |
| வெஃ<br>வேத | நிஜமாகத்தெரிந்துகொள்ளுகிறானோ |

(ஸஃ) ஸஃ — அவன்

தத் தத் — அந்தப்பிர்ம்மத்தை

வேத வேத — தெரிந்துகொள்ளுகிறான்.

தாத்பரியம்.

ஓ மஹாஸ்வாமி! தாங்கள் நினைத்தபடி எனக்கு ஸ்வாநுபவமில்லாமற் போனபடியினாலும், விசாரணையில்லாமற் போனபடியினாலும், சமுசய விபரீதபாவனைகளைப் போக்கடித்துக் கொள்ளாததினாலும், பிர்ம்மத்தை நன்றாய்த் தெரிந்துகொண்டேனென்று நான் சொன்னவார்த்தை நிஜந்தான். ஆனால் தாங்கள் சர்வஞ்ஞமூர்த்தி யாகையால், என்னை நானே ஏமாற்றிக் கொண்ட சங்கதியைத் தாங்கள் தெரிந்து கொண்டு, என்னைச் சங்கைசெய்து என்னுடைய சமுசய விபரீத ஞானத்தைத் தங்களுடைய ஹஸ்த மஸ்தக ஸம்யோகமான, ஸ்பர்சதீக்ஷையினாலும், கடாக்ஷவீக்ஷணமென்கிற திருஷ்டி தீக்ஷையினாலும், மனஸ்ஸம்யமயோக மென்கிற மானஸிக தீக்ஷையினாலும், என்னைக் கிருதார்த்தனாகச்செய்து, ஏகாந்தஸ்தலத்திலிருத்திச், சித்த சமாதானமுடையவனாக்கித் தாங்க ளுபதேசித்த மார்க்கத்தை முதலில்மனனஞ்செய்து பிற்பாடு நிதித்தியாஸம் இடைவிடாமல் குரு உபதேசித்த லக்ஷியத்தில் மனதை நிறுத்தச்சொன்ன பிரகாரம் அநுஷ்டித்ததினால் எனக்குண்டான ஸ்வாநுபவ சங்கதியைச் சொல்லுகிறேன். அதனால் தாங்களோ என்னுடைய

நிஜஸ்திதியைத் தெரிந்துகொள்ளலாம்; என்று சீடன் தெரியப்படுத்திக் கொள்ளுகிறதாவது:—

அந்த பிர்ம்மமானது சுவாநுபவத்தினு லடையத் தகுந்த தாகையினுலும், ஞாதிரு ஞாந ஞேய பேதங் களற்ற தாகையினுலும் "நான் நன்றுய்த் தெரிந்து கொண்டேன்" என்று இப்போதுசொல்லமாட்டேன். அந்தப் பிர்ம்மமானது சர்வ பரிபூரணமாய் எல்லா வற்றிலும் உள்ளும் புறமும் மேலுங்கீழும் பக்கங்களி லும் எங்கும் நிறைந்து சகலத்திற்கும் அந்தரியாமி யா யிருக்கிறதினுலும், ஞாநிகள் சுவாநுபவத்தால் அநுபவிக்கிறபடியாலும் நான் தெரிந்துகொள்ள வில் லையென்று சொல்லவு மாட்டேன். மற்றென்னையெ னில், சுருதியினுலும் முக்கியமாய்க் குருபதேசத்தி னுலும் நன்றுய் விசாரணைசெய்து குருகுலவாசத்தி னுல் சகலசந்தேகவிபரீதங்களுமற்றபிற்பாடு உண்டா கும், ஸர்வபேத சூனிய ஸாக்ஷாத்கார தைரிய நிச்சய ஸ்வாநுபவத்தினுல் தெரிந்துகொண்டவனுய் நினைக் கிறேன். நான் தெரிந்துகொள்ளவில்லையென்று சொல் லமுடியாதவனு யிருக்கிறேன் என்று எங்களில்எவன் நிஜமாய்த் தெரிந்துகொள்ளுகிறுனே, அவனே அந்த பிர்ம்மத்தை நிஜமாய்த் தெரிந்துகொண்டவனுகிறுன்.

" நாஹம்ஙெ்ஸுவெட."

நாஹம்மந்யேஸுவேத.

"நான் பிர்ம்மத்தை நன்றுய்த் தெரிந்துகொண் டேன்" என்று நினைக்கமாட்டேன் என்றதினுல் அந்த பிர்ம்மத்தைத் தெரிந்துகொள்வது மிகவும் கஷ்டமெ ன்றதைத் தெரிவித்தது.

"ന്നാനവെദ"

"நோநவேத".

"நான் தெரிந்துகொள்ளவில்லை" என்றும் நினைக்க மாட்டேனென்றறிஞல், சாஸ்திரத்தில் நம்பிக்கையும் குருவாக்கியங்களில் விசுவாசத்தையும் வைக்கிறறிஞல் அந்தப்பிர்ம்மத்தை யடைவது சுலபமென்றதைத் தெரிவித்தது.

"വെദ ച"

"வேத ச".

தெரிந்துகொண்டே னென்று நினைக்கிறேன் என்றறிஞல் அந்தப் பிர்ம்மமானது சகலபேத சூன்ய சாக்ஷாத்கார வஸ்துவென்பதைத் தெரிவித்தது என்று தெரிந்து கொள்ளவும்.

---

## மூன்றாவது மந்திரம்.

---

அவதாரிகை.

"கேநேஷிதம்" யாரால் பிரேரணை செய்யப்பட்டது? என்று சிடன் குருவைக்கேட்ட முதற்கண்டம் முதல் மந்திரம் முதல், இதுவரைகும் நடந்த வினு விடை ரூபமான குருசிஷ்ய சம்வாதங்களினல், நிர்ணயஞ் செய்யப்பட்ட சித்தாந்த தாத்பரியத்தை இச்சுருதி ஸ்திரப்படுத்துகிறது. எப்படியெனில்:—

3.

ശ്രുതി॥ യസ്യാമതം തസ്യമതം
മതം യസ്യ നവെദ സഃ।

அவிஜ்ஞாதம் விஜாநதாம்
விஜ்ஞாதமவிஜாநதாம்॥ ௩॥

சுருதி॥ யஸ்யாமதம் தஸ்யமதம்
மதம்யஸ்ய நவேதஸ:।
அவிக்ஞாதம் விஜாநதாம்
விக்ஞாத மவிஜாநதாம்॥ ॥௩॥

| | |
|---|---|
| யஸ்ய<br>யஸ்ய | இந்திரிய மனோநிக்கிரகங்களைப் பெற்று(பிர்ம்மாநுபவத்தை யடைவதற்காக அதிக ஆஸக்தியுடனிருக்கும்) எந்தச் சாதகனுக்கு, |
| ப்ரஹ்ம<br>பிர்ம்ம | பிர்ம்மமானது |
| அமதம்<br>அமதம் | (ஆத்மதத்துவ நிச்சய பலாவஸாநாவபோதத்துடன் கூடின மனோவிருத்தியற்ற) மனோவிருத்தி மாத்திரத்தால் கோசரமாகாது (என்று தெரிந்துகொண்ட) |
| தஸ்ய<br>தஸ்ய | அந்தப்புருஷனுக்கு, |
| (ஆத்மவேத)<br>ஆத்மத்வேந | (விஷயப்பிரவிருத்தியற்ற) ஸ்வஸ்வரூபாநுபவத்தினால் |
| மதம்<br>மதம் | தெரிந்துகொள்ளப்படுகிறது. |
| யஸ்ய<br>யஸ்ய | இந்திரியநிக்கிரக, மனோநிக்கிரக சாதனங்களற்றவனுக்கு |
| தத்<br>தத் | அந்தப்பிர்ம்மமானது |

| | |
|---|---|
| ஊதழ<br>மதம் | என்மனதிற்குக் கோசரமாயிற்று என்கிற அபிப்பிராயத்தை யுடைத்தாயிருக்கிறானோ, |
| ஸஃ<br>ஸஃ | அவன் (அப்படிப்பட்ட விவேகமற்றவன்) |
| ந, வெத<br>ந, வேத | பிர்ம்மத்தைத் தெரிந்தவனல்லன். |
| விஜாநதாழ<br>விஜாநதாம் | (பிர்ம்மமானது புத்திக்கு விஷயமானதாகத்) தெரிந்து கொண்டவர்களுக்கு |
| அவிஜ்ஞாதழ<br>அவிக்ஞாதம் | தெரியப்படாதது. |
| அவிஜாநதாழ<br>அவிஜாநதாம் | (பிர்ம்மமானது தெரியப்பட்டதற்கும் தெரியப்படாததற்கும் வேறானதாகவும், புத்திமுதலானவைகளுக்கு விஷயமாகாததாகவும் நினைத்திருக்கிறவனுக்கு) தெரிந்து கொள்ளாதவனுக்கு |
| விஜ்ஞாதழ<br>விக்ஞாதம் | (ஸ்வ ஸ்வரூபாநுபவத்தினால்) தெரிந்துகொள்ளப்படுவது. |

**தாத்பரியம்.**

ஏதாவதொரு சங்கதி சித்தாந்தமாக வேண்டுமானால் அது சுருதி யுக்தி அநுபவம் இம்மூன்றுஞ் சேர்ந்திருந்தாலல்லது சித்தாந்தமாகமாட்டாது. இந்த உபநிஷத்தின் முதலாவது சுருதிமுதற்கொண்டு இந்தச் சுருதிவரைக்கும் பிர்ம்மத்தைக்குறித்து நடந்த குருசிஷ்ய ஸம்வாதத்தினால் யுக்தி அநுபவப்பிரகா

ரமாய்ப் பிர்ம்ம வஸ்துவினுடைய சித்தாந்தத்தைக் குருசிடனுக் குபதேசித்தனர். அப்படிப்பட்ட உபதேசத்தினுல் சிடனுக்கு யுக்தியினுலும் அநுபவத்தினுலும் உபதேசித்த சித்தாந்தமானது ஸ்வாநுபவத்திற்கு வந்தபோதிலும் அது ஸ்திரப்படுவதற் காக ஆதார (Authority) ரூபமான சுருதி சித்தாந்தத்தமானது சிடனுக் குபதேசிக்கப்படுகிறது, எப்படியெனில்:—

ஏது ஞான கர்மேந்திரியங்களுக்காவது அல்லது அந்தக்கரணத்திற்காவது அகோசரமான வஸ்துவோ, அதை சத்குருவினிடத்தில் சுருதி யுக்தி அநுபவங்களுடன்கூடின, விசாரணையினுலேயே தெரிந்துகொள்ள வேண்டியது. ஆகையால், எவன் மேற்சொன்னபிரகாரம் சத்குருவை யடைந்து, அவரிடத்தில் நன்குய்ச் சிரவணஞ் செய்து சகல சந்தேக விபரீதங்களையும் போக்கடித்துக்கொண்டு அந்தப்பிரகார மநுஷ்டித்து ஆத்மதத்துவ நிச்சய பலாவஸானுவ போதத்துடன் கூடின மநோநிவிருத்தியை யடையாமல், சாதாரண மனுேநிவிருத்தியால் கோசர மாகாதென்று தெரிந்துகொண்ட இந்திரிய மநோநிக்கிரங்களையுடைய சாதகனுக்குப் பிர்ம்மஸ்வ ரூபமானது, ஸ்வாநுபவ சித்தமாகவே இருக்கிறது. பிர்ம்மஸ்வரூபமானது எனக்குத் தேஜோமயஸ்வ ரூபமாயும், கோடிசூரிய னுதயமானுற் போலும், வெட்டவெளியாயும் இவ்வித அநேகவிதங்களாய் நான் நன்குய்த் தெரிந்துகொண்டே னென்று எண்ணுகிறவனும் அல்லது சொல்லுகிறவனுமான இந்திரிய மனுேநிக்கிரகங்களற்ற அவி

வேகி யானவன் இப்படி தேஜோமயமாகவும், கோடி சூரியப் பிரகாசமாகவும், வெட்ட வெளியாகவும் யநேகவிதங்களாகத் தெரியும் சகலமும் மனோவிகாரங்க ளென்றும் மனதினு லறியக்கூடியதெல்லாம் அநித்தியங்க ளென்றும், ஆகையால் தான் மனதினுல் தெரிந்துகொள்ளப்படும் எல்லாவற்றிற்கும் வேருனது அப்பிர்மமென்றும், சத்குருவை யடைந்து தத்துவங்களைத் தெரிந்துகொள்ளாமையால் அத்தகைய அவிவேகிகளுக்குப் பிர்ம்மமானது தெரிந்துகொள்ளப்படாத தாகவே இருக்கிறது.

ஶ்லோ॥ யாவேதவாஹ்யாஸ்ம்ருதயோ
யாஶ்சகாஶ்ச குத்ருஷ்டய:।
ஸர்வாஸ்தா விஷ்டலா:ப்ரோக்தா
ஸ்தமோநிஷ்டாஹிதாஸ்ம்ருதா:॥

சுலோ || யாவேத பாக்யாஸ்ம்ருதயோ
யாஸ்சகாஸ்ச குத்ருஷ்டய:।
ஸர்வாஸ்தா விஷ்டலா:ப்ரோக்தா
ஸ்தமோ நிஷ்டாஹிதாஸ்ம்ருதா:||

(இ - ள்.) வேதசாஸ்திரங்களை நம்பாதவர்களும் அல்லது வேதத்தின் கொஞ்சபாகத்தை மாத்திரம் நம்புகிறவர்களும் தானுகவாவது குருமுகமாயாவாவது தெரிந்துகொள்ளாமல் வேதசாஸ்திரத்தை ஆதாரமாகக் கொள்ளாதவர்கள் அங்கங்கே உபந்நியாஸஞ்செய்யும் சிலவார்த்தைகளைக் கேட்டு, நம்புகிறவர்களும், அப்படிக் கேட்டபடியால் அவைகளையே ஆதாரமாக வைத்துக்கொண்டு குதர்க்கவாதமாவது ஜல்பவாதமாவது அல்லது விதண்டாவாதமாவது செய்கிறவர்களும் இப்படிப்பட்ட எல்லோரும் அபமார்க்கப் பிரவர்த்தகர்களென்

றும், பிரையோஜனமற்ற (நிஷ்பலமான) சித்தாந்த முடையவர்களென்றும் சொல்லப்படுவார்க ளென்று ஸ்மிருதி சொல்லுகிறபடியால், "நான் என்னுடைய புத்தி விருத்தியினால் தெரிந்துகொண்டேன்" என்பவர்களுக்கு பிர்ம்மமானது தெரியப்படமாட்டாது. அந்தப் பிர்ம்மமானது தெரியப்பட்டதற்கும் தெரியப்படாத தற்கும் வேறானதாகவும் புத்தியாதிகளுக்கு விஷயமாகாததாகவும் யார் தெரிந்துகொள்ளுகிறார்களோ, அவர்கள் குருபதேசாநுஷ்டான ஸ்வாநுபவத்தினால் தெரிந்து கொள்ளுகிறார்க ளென்றும் இம்மந்திர முபதேசிக்கிறது.

---

## நான்காவது மந்திரம்.

---

### அவதாரிகை.

"அவிக்ஞாதம் விஜாநதாம்" பிர்ம்மமானது தெரிந்துகொள்ளவில்லை யென்பவர்களுக்குத் தெரியப்படும் என்றும், "விக்ஞாதம் அவிஜாநதாம்" பிர்ம்மமானது தெரிந்துகொண்டேன் என்பவர்களுக்குத் தெரியப்படமாட்டாது என்றும் முன் சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. தெரிந்து கொண்டே னென்பவனுக்குத் தெரியாது. தெரிந்துகொள்ளவில்லை யென்பவனுக்குத் தெரியுமென்று சொல்லுவது விருத்த மல்லவா? இதைத்தவிரவும் சுழுத்தி மூர்ச்சைமுதலான அவஸ்தைகளிலும், தனக்குள்ள அல்பபண்டிதத் தன்மையின் கெர்வத்தால் சத்குருவை யடைந்து வேதாந்தச் சிரவணஞ்செய்யாத அவிவேகஸ்திதியிலும், சாராயம், கஞ்சா, பாங்கு, அபின் மாஜூம் முதலான மத்துப் பதார்த்தங்களைச் சாப்பிட்டுச் சம்பூர்ண மய

க்கமுண்டா யிருக்குங் காலேயிலும், அப்படிப்பட்ட அவஸ்தை யுடையவர்களைக் கிருத கிருத்யர்கள், தந்நியர்கள், பிர்ம்மஞானிகள், முக்தர்கள் என்று சொல்லவேண்டிவரும். ஏனெனில் அவர்களெலோரும் மயக்கத்தினுல் ஒன்றுந் தெரியாம லிருக்கிற ஸ்திதியை யடைந்தவர்களாகயால் பிர்ம்மத்தைத் தெரிந்தவர்களென்றே சொல்லவேண்டுமென்கிற சமுூம்சயத்தை நிவாரணஞ் செய்வதற்காக இந்தமந்திரம் சொல்லத் தொடங்குகின்றது:

4.

ஶ்ருதி॥ ப்ரதிபொயவிதிதம்மதம்
அம்ருதத்வம்ஹிவிநதெ।
ஆத்மநாவிநதெவீயம்
விதயாவிநதெஅம்ருதம்॥ ௪॥

சுருதி|| ப்ரதிபோதவிதிதம் மதம்
அம்ருதத்துவம்ஹி விந்ததே।
ஆத்மநாவிந்ததே வீர்யம்
வித்யயா விந்ததே அமிருதம். ||௪||

(யதா)
(யதா) — எப்பொழுது

ஹி
ஹி — எந்தக்காரணத்தினுல்

ப்ரதிபொய விதிதம்
பிரதிபோத விதிதம் — [மேற்சொன்ன உன்மத்த பதார்த்தங்களைச் சாப்பிட்டு புத்திமயக்கங்கொண்டிருக்கிற அவஸ்தையை விஷயாஸக்தியுடைய அவிவேகிகள்போதம் என்பார்கள்.

அவ்வித புத்தி மயக்கமான போதத்தை (நிஜபோத மென்று மோசம் போகாமல்) எது தன்னிடத்தில் "நான்" என்று வியவகரித்துக்கொண்டிருக்கிறதோ, அதுவே எல்லாவற்றிலும் "நானாக" இருக்கிறது. ஆகையால், 'நானாகிற' தன்னைத் தவிர இரண்டாவது பதார்த்தம் இல்லவே இல்லை என்று] சர்வசமத்துவ புத்தியினால் ஸ்வாநுபவானந்த போதம் எப்பொழுதுண்டாகுமோ,

| | |
|---|---|
| (𑌤𑌦𑌾)<br>(ததா) | அப்பொழுது |
| (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮)<br>(பிரும்ம) | பிர்ம்மமானது |
| 𑌮𑌤𑌂<br>மதம் | (ஸ்வாநுபவத்தினால்) தெரியப்படும். |
| (𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍)<br>(தஸ்மாத்) | அந்தக்காரணத்தினால் |
| 𑌅𑌮𑍃𑌤𑌤𑍍𑌵𑌂<br>அம்ருதத்வம் | (அவித்தையும் அதன்காரியங்களான ஜநந மரணாதிகளும்அற்ற, ஸ்வயம்பிரகாசனந்த ஸ்வரூபமாகிய "தான் தானாகவே" இருக்கிறதென்ற) மோக்ஷத்தை |
| 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑍇<br>விந்தே | அடைகிறான். |

| | |
|---|---|
| (ஆத்மவித்) | (மேற்சொன்ன விதமாய் ஆத்மானந்த ஸ்வாநுபவத்தை யடைந்த) ஜீவன் முக்தனானவன் |
| ஆத்மநா | ஸ்வஸ்வரூபாநுஸந்தானத்தினால் |
| வீர்யம் | (அணிமாதிசகல) சித்திகளையும் |
| விந்ததே | அடைகிறான். |
| வித்யயா | (இத்தகைய) பிர்ம்மவித்தையினால் |
| அம்ருதம் | மோக்ஷத்தை |
| விந்ததே | அடைகிறான் (என்பது) |
| (ஹி) | பிரசித்தம் (சந்தேகமற்றது.) |

### தாத்பரியம்.

ஆகாசமானது எப்படி கட மட குட்யம் முதலிய எல்லாவற்றிலும் தானாகவே இருக்கிறதோ, அப்படி.

ஸ்ருதி॥ த்ருஷ்டேர்த்ரஷ்டா ச்ருதேச்ரோதா
மதேர்மந்தா விஜ்ஞாதேர்விஜ்ஞாதா॥

சுருதி || த்ருஷ்டேர்த்ரஷ்டா ச்ருதேச்ரோதா
மதேர்மன்தா விக்ஞாதேர்விக்ஞாதா||

(இ - ள்.) பார்க்கிறவர்களுக்குப் பார்க்கிறவனாகவும், கேட்கிறவர்களுக்குக் கேட்கிறவனாகவும், நினைக்கிறவர்களுக்கு

நினைக்கிறவனுகவும், அறிந்துகொள்ளுகிறபேர்களுக்கு அறிந்துகொள்ளுகிறவனுகவும், எல்லாவற்றிற்கும் எல்லாமாகவுமிருக்கிறது "தாந்தான்" என்று தன்னைத்தவிர வேறொன்றையுந் தெரியாத போதம் மாத்திரமாய் நிற்கும் ஸ்வஸ்வரூபாநுபவானந்த ஸ்திதி எப்பொழுதொருவனுக் குண்டாகுமோ அப்பொழுதுதான் நிஜமாக பிர்ம்மத்தைத் (ஆத்மாவை=பகவானை) தெரிந்துகொண்டவனுகிறான். இப்படி பிர்ம்மாநுபவமுடையவன் மோக்ஷத்தை யடைகிறான். அப்படிப்பட்ட பிர்ம்மவேத்த சகல சர்வக்ஞத்துவாதி சாமர்த்தியங்களையு முடையவனுகிறான். இப்படிப்பட்ட பிர்மவித்தையினல் மோக்ஷமானது சித்திக்குமென்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. என்று இம்மந்திரமுபதேசிக்கிறது.

இதற்கு பூர்வபக்ஷியினுடைய கேள்வி:—

எது மரங்களையும், செடிகளையும், சலிக்க (அசைய)ச்செய்கிறதோ, அது காற்றென்றாற்போல, வாய், கண், மூக்கு, காது, மனது முதலானவைகளைப் பிரவிருத்திக்கச்செய்கிறதுபிர்ம்மமென்றுசொல்லும்பக்ஷத்தில் முதலாவது கண்டம் இரண்டாவது மந்திரம் முதற்கொண்டு இதுவரைக்கும் சொல்லப்பட்ட பிர்ம்மமானது திரவ்விய பதார்த்தமாய்விட்டது. எப்பொழுது பிர்ம்மமானது திரவியபதார்த்தமாய்விட்டதோ அப்பொழுது போதக்கிரியா சக்தியையுடையது பிர்ம்மமென்றாயிற்றே யல்லாமல் போதஸ்வரூபம் பிர்ம்மமென்றாகவில்லை. ஆகையால் போதமானது உண்டாகிறதும் நசிக்கிறதுமாயிற்று. எப்போது போதமுண்டாகிறதோ அப்போது போதக்கிரியை உண்டா

கிறது. எப்போது போதம் நசிக்கிறதோ அப்போது போதக்கிரியை நசிக்கிறது. இப்படியானால், பிர்ம்ம மானது இருந்தழியக்கூடிய அவயவங்களை யுடைத் தானதென்றும், அநித்தியவஸ்துவென்றும், அசுத்த வஸ்துவென்றும் சொல்லவேண்டியதாயிற்று என்றனன்.

அதற்குச் சித்தாந்தியின் சமாதானமாவது:—

இப்பொழுது நீ சொன்னவையெல்லாம் ஜீவாத்மா வேறு பரமாத்மாவேறு என்ற தார்க்கிகமதத்தின் கோட்பாடுகளென்றும், வேதாந்த சித்தாந்தமல்லவென்று தெரிந்துகொள்.

வேதாந்த சித்தாந்தமானது:—

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ "𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮"

சுருதி || "விக்ஞாந மாநந்தம் பிர்ம்ம"

𑌶𑍍𑌰𑍁𑌤𑌿॥ "𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮"

சுருதி || "ப்ரக்ஞாநம் ப்ரும்ம"

[illegible]

சுருதி || அஸங்கோ நஹிஸஜ்ஜதே ||

(இ-ள்.) பிர்ம்மமானது சங்கமற்றதாகையால், சங்கத்தினால் பாதிக்கப்படமாட்டாதென்றும்,

[illegible]

[illegible]

[illegible]

சுலோ || அஸக்தம்ஸர்வப்ருச்சைவ நிற்குணம்குணபோக்த்ருச||
பகவத்கீதை. அ-கங, சுலோ-கரு.

(இ-ள்.) இந்த பிர்ம்மமானது ஒன்றிலும் ஒட்டாததும், எல்லா ஜகத்ப்பிரமைகளுக்கும் அதிஷ்டானமானதும், சத்துவரஜஸ்தமோ குணங்களற்றதும், குணங்களை யநுபவிக்கிறாப்போலத் தோன்றுகிறதாயு மிருக்கிறதென்றும்,

சுருதி ஸ்மிருதிகள் கோஷிக்கிறபடியால், இந்தப் பிர்ம்மத்திற்குச்சரியாக வேறொருவஸ்துவைச் சொல்லமுடியாது. இது ஒன்றே போதஸ்வரூபமாயும், போக்த்ருத்வமாயுமிருக்கிறது, என்று சித்தாந்தி சொன்னான்.

மறுபடியும் பூர்வபக்ஷி கேட்கிறதாவது:—

அப்படியானால் பிர்ம்மமானது புத்தி இந்திரியமுதலியவற்றை கற்பித்துக்கொண்டு தன்னைத் தெரிந்துகொள்ளுகிற தென்ற வியவகாரம் பிர்ம்மத்திற்கு இருக்கிறபடியால், பிர்ம்மத்தை நிருபாதிக வஸ்துவென்று சொல்லக்கூடாது, ஸோபாதிக வஸ்துவென்றே சொல்லவேண்டிய தாயிற்று, எனில்,

சித்தாந்திச் சமாதானம் சொல்லுகிறதாவது:—
அப்படியல்ல, ஏனெனில்,

ஶ்ரு—தி॥ "ஆத்மநைவாத்மாநம்பஶ்யதி॥"

சுருதி || ஆத்மனைவாத்மாநம்பஶ்யதி||

இ-வை|| சுத்தாந்தக்கரண ஸ்வரூபமான தன்னாலேயே பிர்ம்மத்தை ஸ்வாநுபவத்தா லடையலா மென்றும்,

ஶ்ரு॥ ஸ்வயமேவாத்மநாத்மாநம்
வேத்த²த்வம்புருஷோத்தம॥

ஸஹ. ௯-௧௦, ஶ்ரு-௧௫.

சுலோ ॥ ஸ்வயமேவாத்மநாத்மாநம் வேத்தத்தவம்புரு
ஷோத்தம॥

பகவத்கீதை-அ-௧௦-சு-15.

ஶ்ரு॥ ஆத்மந்யேவாத்மநாதுஷ்டஃ..................

ஸஹ. ௯-௨, ஶ்ரு-௫௫.

சு ॥ ஆத்மந்யேவாத்மநாதுஷ்டஃ ... ...ப-அ-௨-சு-௫௫.

ஶ்ரு॥ ஆத்மந்யேவஸஞ்துஷ்டஃ......................

ஸஹ. ௯-௩, ஶ்ரு-௧௭.

சு ॥ ஆத்மந்யேவசஸன்துஷ்டஃ ... ... ப-அ-௩-சு-௧௭.

ஶ்ரு॥ ஆத்மைவஹ்யாத்மநோபந்து:.................

ஸஹ. ௯-௬, ஶ்ரு-௫.

சு ॥ ஆத்மைவஹ்யாத்மநோபந்துஃ ... ... ப-அ-௬-சு-௫.

ஶ்ரு॥ ஆத்மௌபம்யேநஸர்வத்ர......................

ஸஹ. ௯-௬, ஶ்ரு-௩௨.

சு ॥ ஆத்மௌபம்யேநஸர்வத்ர ... ... ப-அ-௬-சு-௩௨.

(இவைகளின் விவரத்தை இந்த வியாக்கியானகர்த்
தர்வால் ரசியிக்கப்பட்டிருக்கிற பகவத்கீதா கூடார்

த்ததீபிகையைப்பார்க்கவும்) என்றும்சுருதி ஸ்மிருதி கள் சொல்லுகிறபடியால் அவிடத்தில் ஸோபாதிக பிர்ம்ம மென்று தாத்பரியமல்ல நிருபாதிகப் பிர்ம மென்றே தாத்பரியம்.

பூர்வபக்ஷி திரும்பவும் கேட்கிறதாவது:—

ஒன்றுந் தெரியாமல் தானாக இருக்கிறதே போதம் என்றால் சுழுத்தியிலும் மூர்ச்சாவஸ்தையிலும் சாராயம், கள்ளு, அபின், பாங்கு, கஞ்சா, மாஜூம், பூர்ணுதிலேகியம் முதலியவைகளை நன்றாய் சாப்பிட்டிருக்கிற போது ஒன்றுந் தெரியாத அவஸ்தை சம்பவிக்கிறது; அதுவே பிர்ம்மாநுபவம்போ லிருக்கிறது. அதினுற்றான் பைராகிகள் ஜாரர்கள் சோம்பேரிகள் இவர்களெல்லாரையும் ஞானிகள் என்றே நினைக்கவேண்டும் போலிருக்கிறது. அப்படியானால் சாஸ்திரம் குரு முதலானவைகளும் அவசியமில்லை எனில்,

சித்தாந்தி சமாதானஞ் சொல்லுகிறதாவது:—

நீ சொல்லுகிறபடி ஒன்றுந்தெரியாதசுழுத்தி மூர்ச்சாவஸ்தையையும் மத்து பதார்த்தங்களைச் சாப்பிட்டுப் புத்திமயங்கி இருக்கிற அவஸ்தையையும் போதஸ்திதிஎன்று சொல்லக்கூடாது. ஏனெனில், சமாதி நிஷ்டை, தியானம் ஸ்வாநுபவம் ஐக்கியம் என்கிற போதஸ்திதியில் ஸ்வப்பிரகாச ஸ்திதியுண்டு. அதைத்தவிர வேறொன்று மிராது. நீ சொல்லுகிற போதாவஸ்தையில் புத்திமயங்கி ஒன்றுந் தெரியாத காடாந்தகாரமான அவிவேகத்தில் மூழ்கித் தன்னை இழந்திருக்கிற அவஸ்தை இந்த நிஷ்டையோவெனில், எல்

லாவற்றிலும் தானாக விருப்பதினால் தன்னைத்தவிர ஒன்றும் இருக்காது ஆகையால் தெரியாது, என்று தெரிந்து கொள்.

---

## ஐந்தாவது மந்திரம்.

### அவதாரிகை.

நான்காவது மந்திரத்தில் சொல்லப்பட்ட "ப்ரதி போதவிதிதம்" அதாவது எல்லாவற்றையுந் தானாகப் பார்க்கிற ஸர்வசமத்துவ புத்தியாகிய போதத்தைப் பெறுதல். இதனைப் பெற்றாலொழிய மோக்ஷமில்லை யெனில், அப்பேர்க்கொத்த போதத்தை யடைவது மிகவும் கஷ்டமாயிருக்கிறது, ஆகையால் அதுஎனக்கு இப்போது வேண்டியதில்லை. மோக்ஷவிஷயமோ? பார்த்துக்கொள்ளலாம். இப்பொழுது அவ்வளவு அவசரமுமில்லை, கஷ்டமுமில்லை, நஷ்டமுமில்லை. காலாந்திரத்தில் அதுவிஷயமாய் ஆலோசிக்கலாம் என்று நினைப்பாயேயாகில், இப்பேர்க்கொத்த அக்ஞானத்தினாலேயே மிகக் கஷ்டமாகிய தேவமானிட திரியக்காதி ஜன்மங்களும் அச்சென்மங்களினால் காமக்ரோதாதி சம்சாரதுக்கங்களும் வியாதி பீடைமுதலிய சகிக்கமுடியாத கஷ்டங்களும் நேரிடுகின்றன. இதைத்தவிரவும் நீ இச்சரீரத்தின் நிஜஸ்திதியைத் தெரிந்துகொள்வாயேயானால் இப்படிச் சொல்லமாட்டாய். இச்சரீரமோ இரவல் பதார்த்தம். என்பதற்குத் திருஷ்டாந்தத்தைக்கேள்:—

ஒருவன் கையில் ஈசாவாஸ் யோபநிஷத்து வியாக்கியான புஸ்தகத்தை மற்றொருவன் பார்த்து, இப்புஸ்தகத்தை எனக்கு இரண்டுநாள் இரவலாகக் கொடுக்க வேண்டும் என்று கேட்டான், அப்படியே அவன் கொடுத்தான். இரவலாக வாங்கிக்கொண்டு போனவன், புஸ்தகத்தில் நான்குவரிகளைப்படித்துப் பின்பு ஆஹா! இப்புஸ்தகம் நன்றாக இருக்கிறது. இதற்கு அநியாயமாய் கடிதத்தை அட்டையாகச் செய்திருக்கிறார்கள், இப்பேர்கொத்த மேன்மையான உபநிடத வியாக்கியானத்திற்கு இந்த அட்டையா போடுகிறது? என்று அக்கடிதாசி அட்டையைநீக்கிப் பட்டுஅட்டை போடுவித்தான், அவ்வட்டை போட்டபிற்பாடு பார்த்து தனக்குத்தானே சொல்லிக் கொள்ளுகிறதாவது:—"எல்லாக் கிரந்தங்களுக்கும் மேலானது உபநிஷத்து. அதற்கு உயர்ந்தஅட்டையே இருக்கவேண்டும்" என்று எழுந்திருந்து ஆயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டு தட்டான் வீட்டிற்குப்போய் இப்புத்தகத்திற்குத் தங்கத்தினால் அட்டையும், அவட்டையில் அங்கங்கே பச்சை, வைடூரியம் முதலான விலையுயர்ந்த ரத்னங்களையும் பதிப்பிக்கவேண்டும். அதற்காக, இதோ ஆயிரம்ரூபாயென்று தட்டான்கையில் கொடுத்து வேலை யாரம்பித்து நடத்திக்கொண்டுவர; நாள்-ஆறேழாயிற்று. அப்போது இரவல் கொடுத்தவன் "இரண்டுநாளையில் திரும்பக் கொடுக்கிறேனென்று வாங்கிக்கொண்டு போனவன் இன்னமும் கொண்டு வரவில்லையே" என்றுதானே அவன் வீட்டிற்குப் போக, அவனை வீட்டிற்காணமுடியாமல் தட்டான்

வீட்டில் சந்தித்தான். அப்போது விசாரிக்கையில் புஸ்தகத்திற்கு இவ்வளவு செலவழித்து அலங்கரித்துக் கொண்டிருக்கிற விவரத்தைத் தெரிந்துகொண்டு ஓகோ! புஸ்தகத்திற்கே மோசம்வந்து விட்டாற் போலிருக்கிறதே? என்று சொல்லி (தான் சொந்தக்காரனுகையால்) இரவல் வாங்கினவனுடைய கையில் அரைகுறையாய் வேலைமுடிந்திருக்கிற தன்புஸ்தகத்தைப் பறித்துக்கொண்டு போய்விட்டான். அப்பொழுது இரவல் வாங்கிக்கொண்டு வந்தவன் தனக்குள்ள நஷ்டங்களையும், தன்னுடைய தப்பிதங்களையும் குறித்து ஆலோசிக்கிறதாவது, "இரவலாக வாங்கிக்கொண்டுவந்த புஸ்தகத்தை, இரவலென்பதை மறந்துவிட்டதே முதல்தப்பு. எதற்காக அப்புத்தகத்தை வாங்கிகொண்டுவந்தேனே,அதையும்மறந்தது இரண்டாவதுதப்பு. இம்மறப்புகளினுல் புஸ்தகத்தைத் தனதாக எண்ணிக்கொண்டு அதன் அலங்கார விஷயமாய் அநேக செலவுகள் செய்தது மூன்ருவதான பெருந்தப்பு. இப்பேர்க்கொத்த தப்புகளினுல் புஸ்தகத்திலுள்ள கூடார்த்தங்களைத் தெரிந்து கொள்ளாமற் போனதுமுதல் நஷ்டம், அதன் அலங்காரத்திற்காகச் செலவழித்த திரவியநஷ்டம், இரண்டாவது, இனிமேல் போய் இரவல் கேட்டால் தன்னைநம்பி இரவல் கொடுக்கமாட்டானென்பது, மூன்ருவதுநஷ்டம். இப்படிப் போல, நற்கெதியை யடைவதற்கு முக்கிய சாதனமாயுள்ளஞானத்துடன்கூடின இம்மானிடசரீரத்தை இரவலாகப்பெற்றிருக்கிறநாம், இரவலென்கிறசங்கதியை மறந்ததாகிய முதல்தப்பையும், எதற்காக இச்சரீரத்தை இரவலாக வாங்கிவந்தோமென்பதை மறந்தா

15

கிய இரண்டாந்தப்பையும், இம்மறப்புகளினால் இச்சரீரத்தைத் தனதாக எண்ணிக்கொண்டு அச்சரீராலங்காரத்திற்காக புத்திர மித்திர களத்திர தனகனக வஸ்துவாஹந மேடை மாளிகை முதலான அநேகவித செலவுகள் செய்வித்தும் செய்துக்கொண் டிருப்பதும் மூன்றாவது தப்பிதங்களாம். இப்படிப்பட்ட தப்புகளினால் இரவலாகவாங்கிவந்த இச்சரீரத்தில் மோக்ஷசாதனங்களான தத்துவங்களைத் தெரிந்துகொள்ளாமற்போவது முதல்நஷ்டம், "பரோபகாரார்த்தம் இதம் சரீரம்" மோக்ஷசாதனத்திற்காகவே இச்சரீரமென்பதைமறந்து இச்சரீரத்தைத் தனதாக எண்ணி, இரவலென்பதை மறந்து இச்சரீரத்தின் அலங்காரத்திற்காகவும் பின்னும் அநேக இகலோக சுகங்களுக்காகவும் திரவியத்தை செலவழித்துக்கொண் டிருக்கையில், இரவல்கொடுத்தவன்வந்து இச்சரீரத்தைப் பரித்துக்கொண்டு போய்விட்டால் அபரிமிததிரவிய முதலானவைகளின் நஷ்டம் இரண்டாவது. மறுபடியும் இரவல்கேட்போமாகில் முன் இரவல்கொடுத்து மோசம்போனவன் மறுபடியும் இரவல்கொடுக்கமாட்டானுகையால், மறுபடியும் இம்மாநிடஜன்மத்தை யடையமுடியாமற் போகிறது மூன்றாவதாகிய பெரும் நஷ்டம்.

எப்படி மானிடசரீரம் நற்கெதியையடைய முக்கிய சாதனமெனில்; தேவாதி சரீரங்கள் தான்செய்த புண்ணியகர்மங்களின் பலன்களை யனுபவிக்கவேண்டி வந்த சரீரங்கள். அவைகள் "புண்ணியானுபவம் முடிந்தவுடன் மனிதலோகத்தை அடையும்"

𑌶𑍍𑌰𑍁॥ 𑌕𑍍𑌷𑍀𑌣𑍇 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌲𑍋𑌕𑌂 𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑌿॥

சுருதி || க்ஷீணேபுண்யே மர்த்யலோகம்விசந்தி"

என்கிற சுருதிகளின்படி மானிடஜன்மத்தையே அடையவேண்டும், அப்படிக்கல்லாமல் பாபகர்மங்கள் அதிகமானால், திரியக்காதி ஜன்மங்களையடைந்து பாபானுபவங்களை யநுபவித்து முடிந்தவுடன் மறுபடியும் மானிடஜன்மத்தையே அடையவேண்டும். ஆகையால் தேவாதிஜன்மஸ்திதியிலும் திரியக்காதி ஜன்ம ஸ்திதியிலும் நற்கெதியடையமுடியாது; மானிடஜென்மத்திலேயே நற்கெதியடையவேண்டும் என்பது சத்தியம்.

ஆகையால், இந்தச் ஜென்மத்திலேயே நற்கெதியை யடையும்பொருட்டுப் பிரயத்தனஞ் செய்யவேண்டியது அவசியம் என்கிற விஷயத்தையும் அப்படிப் பிரயத்தினம்செய்து பெறுவிடில் மேற்சொன்ன பெரும் நஷ்டங்கள் நேரிடுமென்கிறதையும் தெரியச்செய்வதற்காகவேண்டி இம்மந்திரம் பிராரம்பிக்கப்படுகிறது.

5.

𑌶𑍍𑌰𑍁॥ 𑌇𑌹 𑌚𑍇𑌦𑌵𑍇𑌦𑍀𑌦𑌥 𑌸𑌤𑍍𑌯𑌮𑌸𑍍𑌤𑌿
𑌨 𑌚𑍇𑌦𑌿𑌹𑌾𑌵𑍇𑌦𑍀𑌨𑍍𑌮𑌹𑌤𑍀 𑌵𑌿𑌨𑌷𑍍𑌟𑌿𑌃।
𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌯 𑌧𑍀𑌰𑌾𑌃
𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌦𑌮𑍃𑌤𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿॥ ௫॥

சுருதி || இஹசேதவேதி தத ஸத்ய மஸ்தி
நசேதிஹவேதீன் மஹதீவிநஷ்டிஃ|
பூதேஷு பூதேஷு விசிந்த்ய தீரா
ப்ரேத்யாஸ்மால்லோகாதம்ருதாபவந்தி|| ௫||

| | |
|---|---|
| 𑌸𑌤𑍍𑌯𑌂<br>ஸத்யம் | இந்த மானிடஜன்மத்தில், நாசமற்றதும், ஸத்ஸ்வரூபத்தையுடையதுமாக |
| 𑌅𑌸𑍍𑌤𑌿 (𑌇𑌤𑌿)<br>அஸ்தி, (இதி) | ஒருவஸ்து நிஜமாக உண்டென்று |
| (𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂)<br>ஆத்மாநம் | பிர்ம்மத்தை |
| 𑌇𑌹<br>இஹ | இம்மானிடஜன்மத்தில் (இச்சரீரத்துடனிருக்கும்போது) |
| 𑌅𑌵𑍇𑌦𑍀𑌤𑍍, 𑌚𑍇𑌤𑍍<br>அவேதீத், சேத் | தெரிந்துகொள்ளவேண்டியவிதமாய்த் தெரிந்துகொண்டால், |
| 𑌅𑌥<br>அத | அப்பொழுது |
| (𑌸𑌤𑍍𑌯𑌂, 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇)<br>(ஸத்யம், வித்யதே) | நற்கதிகிடைக்கும். |
| 𑌇𑌹<br>இஹ | தான்ஜீவித்திருக்கிறபோது |
| (𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂)<br>(ஆத்மாநம்) | பிர்ம்மத்தை |
| 𑌨, 𑌅𑌵𑍇𑌦𑍀𑌤𑍍, 𑌚𑍇𑌤𑍍<br>ந,அவேதீத்,சேத் | தெரிந்துகொள்ளாவிட்டால் |
| 𑌮𑌹𑌤𑍀<br>மஹதீ | பெரிதான (மதிக்கமுடியாத) |

| | |
|---|---|
| வி நஷ்டி: <br> விநஷ்டி: | (இடைவிடாமற் றிரியக்கு ஜென்மபரம்பரையில் பிறந்திறந்து கொண்டு இச்சம்சாரத்தினு லுண்டாகும் அநேகவித துக்கங்களை யநுபவிக்க வேண்டிய துர்க்கதியாகிய) நஷ்டமானது |
| (ஹவதி) <br> (பவதி) | உண்டாகின்றது. |
| தஸ்மாத் <br> (தஸ்மாத்) | ஆகையினாலே, |
| தீரா: <br> தீரா: | (மேற்சொன்னவிதமாய் குணதோஷங்களை சத்குருமுகமாய்த் தெரிந்து கொண்டு அநுஷ்டிக்கும்) தீரர்கள் |
| ஹூதேஷு, ஹூதேஷு <br> பூதேஷு, பூதேஷு | சராசரஸ்வரூபமாயிருக்கிற ஒவ்வொரு பூதத்திலும் |
| விசிந்த்ய <br> விசின்த்ய | (இரண்டற்றதாய்த் தானாகவே இருக்கிற பிர்ம்மத்தைச் சிரவண, மனன, நிதித்தியாஸனைகளினு லடைந்த ஸ்வாநுபவத்தினால்) தெரிந்துகொண்டு |
| அஸ்மாத், லோகாத் <br> அஸ்மாத்; லோகாத் | (அகங்கார மமகாரங்களை யுடையதும் அவித்தியா ஸ்வரூபமானதுமான) இவ்வுலகத்தினின்றும் (இச்சென்மத்தினின்றும்) |
| ப்ரேத்ய (உபரம்ய)) <br> ப்ரேத்ய (உபரம்ய) | (உப சாந்தியையடைந்து (எனில், கடாகாச ஜலாகாசங்கள், மஹாகாசமானாற் போல) |

ஃஅ்ரு-தாஃ அம்ருதாः (சகலமும் தானுகவும், தானே சகல மாகவுமிருக்கிற இரண்டற்றிருக்கிற ஸ்திதியாகிய) மரணமற்றதாயுள்ள மோக்ஷத்தை யடைந்தவர்களாக

ஃவந்தி பவந்தி ஆகிருர்கள்.

### தாத்பரியம்.

தேவஜன்மமானது ஜென்மாந்திர புண்ணியவிசேஷத்தால் உண்டாகும். அவ்வுலகத்தில் புண்ணியாநுபவமான சுகமே அதிகமாயிருக்கும். சுகமதிகமாக இருக்கும்போது தெய்வத்தின் நினைவும் தியானமும் உண்டாகிறதில்லை என்பது அநுபவபிரசித்தமாகவே இருக்கிறது. இதுவுமல்லாமல், புண்ணியாநுபவம் முடிந்தவுடனே மானிடலோகத்தை ஜீவனடைகிருனென்ற சுருதிப்பிரகாரம், திரும்பவும் ஜெனனமாக வேண்டும். எப்போது ஜெனனமுண்டோ அப்போது மரணமுண்டென்பது நிச்சயம். ஆகையால் பிறந்திறந்துகொண்டே இருக்கவேண்டும்.

திரியாக்காதி ஜென்மங்கள் அதிபாப கிருத்தியங்களிஞ லுண்டாகும். அச்சென்மங்களில் நற்கதியையடையத்தக்க ஞானமேகிடையாது. அதிக துக்கசமயங்களில், அதாவது நாம் கொடியகாயத்தைப்பெற்று ரக்தப்பிரவாகமாய் இருக்கும் சமயத்தில் புத்தியானது பிரமையடைந்து மூர்ச்சையடைந்து ஞானமிருக்கிறதேயில்லை. அப்படி திரியக் காது ஜென்மஸ்திதியிலும் நற்கெதியடைய அவகாச மிருகாது ஆகையால் மானிடப்பிறவியிலேயே நற்கதியையடை

ய முயற்சிசெய்யவேண்டும். அப்படிச் செய்யாவிடில் "எண்ணரிய பிறவிதனின் மானிடப்பிறவிதா னியாதினும் மரிதரிதுகாண், இப்பிறவிதப்பினு லெப்பிறவி வாய்க்குமோ யேதுவருமோ வறிகிலேன்" என்று மகானுன தாயுமானவர் சித்தர் கணபதிகத்தின் நான்காவது பாடலில் சொல்லியிருக்கிறபடியால்,

நாசமற்றதும், ஸத்ஸ்வரூபத்தை யுடையதும், நிஜமாக முக்காலங்களிலும் இருக்கிறதுமான பிர்ம்மவஸ்துவை (ஆத்மாவை - பகவானை) இந்த மானிடஜென்மத்திலேயே, கரசரணுதி அவயவங்கள் திருடமான சக்தியை யுடைத்தானவைகளா யிருக்கும்போதே சத்குருவையடைந்து அவரது ஆக்ஞையின் பிரகாரம் குருகுலவாசஞ்செய்து, உபதேசிக்கப்பெற்று, நன்ருய் அநுஷ்டித்து, தெரிந்துகொள்ளவேண்டிய விதமாய் தெரிந்துகொண்டால்தான், நற்கதிகிடைக்கும். இவ்விதமாய்ச் செய்யாமல், இப்பிரபஞ்சமே சத்தியம், நாம் எப்போதும் சாகாமல் சிரஞ்சீவியாயிருப்போம், நாம் செய்யக்கூடாத, அநேக பாபகாரியங்களினுல் திரவியார்ஜனைசெய்து, லோகோபகாரமான தர்ம்மகாரியங்களில் பகவதர்ப்பணமாக தான் ஆர்ஜனைசெய்த திரவியத்தை உபயோகப் படுத்தாமல், சரீர அலங்காரத்தின்பொருட்டும், இகலோக சுகத்தின்பொருட்டும், அநியாயமாய்ச் செலவுசெய்து பாரமார்த்திக விசாரணையாவது, பகவத் விசாரணையாவது செய்யாமல் பாபகாரியங்களிலேயே காலங்கழிக்கிற நம்மைப்போலொத்தவர்களுக்குண்டாகும் நஷ்டத்தை, வாயால் சொல்லவும் ஏட்டிலெழுதவும் முடி

யாது. அத்தகைய நஷ்டஸ்திதி யாதெனில், மறுபடி யும் இம் மானிடஜென்மத்தை யடையமுடியாததே யாம். ஆகையால், மேற்சொல்லியவிதமாய் குண தோஷங்களைச் சத்குருமுகமாய் விசாரணைசெய்து தெரிந்துகொண்டு அநுஷ்டித்து, சராசரஸ்வ ரூபமா யிருக்கிற ஒவ்வொரு பூதங்களிலும் இரண்டற்றதா ய்த் தானாகவே இருக்கிற பிர்ம்மத்தைச், சிரவண மனன நிதித்தியாஸனைகளினு லடைந்த ஸ்வாநுபவத் தினுல் தெரிந்துகொண்ட தீரர்கள், அகங்கார மமகா ரங்களினுல் நிறைந்திருக்கிறவும், அவித்தியா ஸ்வரூப முமான இவ்வுலகத்தினின்றும், (இச்சென்மத்தினின் றும்) பதார்த்த பேதங்களால், கடாகாசமென்றும், மடாகாசமென்றும், வியவகரிக்கப்பட்டு உபாதிகளு க்கு, நாசனம் வருங்காலையில், எப்படி மஹாகாசத் தில் சேர்ந்துவிடுமோ, உபாதியுடனிருந்தபோதிலும், ஆகாசத்தை எப்படி உபாதிகள் பாதிக்கமாட்டாவோ அப்படிப்போல, சகலத்தையுந் தானாகவும், தானே சகலமாகவுமிருக்கிறதாய்ப் பார்க்கிற தீரர்கள் மரண மற்ற மோக்ஷத்தை யடைகிறுர்கள், என்று இம்மந் திரம் உபதேசிக்கிறது.

சாமவேதத்தின் தலவகாரோபநிஷத்தென்ற
கேநோபநிஷத்தின்
இரண்டாவதுகண்டம்-முற்றிற்று.

---

ஓம்தத்ஸத்.

ஓம் தத்ஸத்.

ஸ்ரீ ஹரார்ப்பணமஸ்து.

---

# மூன்றாவது கண்டம்.

## அவதாரிகை.

"அவிக்ஞாதம் விஜாநதாம், விக்ஞாத மவிஜாநதாம்" பிர்ம்மமானது தெரியாது என்பவனுக்குத் தெரியும். தெரியுமென்பவனுக்குத் தெரியாது." என்று, இரண்டாவது கண்டத்தின் மூன்றாவது மந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதினால், எது இருக்கிறதோ அதுதெரியும், எது இல்லையோ அது தெரியாது. முயல் கொம்பு என்று ஒருவஸ்து இல்லை. ஆகையால் முயல்கொம்பு ஒருவருக்குந் தெரியாது. அப்படிப் போல இந்தப் பிர்ம்மமானது தெரியாத படியினாலே, முயல் கொம்பைப்போல, அஸத்தென்றே சொல்ல வேண்டும். இப்படி அஸத்தாயிருக்கிற பிர்ம்மத்தினுடைய சர்வக்ஞத்துவாதி சாமர்த்தியத்தினால், அப்பிர்ம்மத்தை சுவாநுபவத்தினால் தியானிப்பவர்கள் "யத்பாவம் தத்பவதி" "யார் எந்தபாவனையுடையவர்களா யிருக்கிறார்களோ, அவர்கள் தத்ஸ்வரூபமாகிறார்கள்" என்கிறபடி அது வாய்விடுகிறார்கள் என்று சொல்வது எவ்வளவு மோசவார்த்தையா யிருக்கிறது; ஏனெனில், முதலில் அசத்தாயிருக்கிற வஸ்துவுக்கு, இருப்பு, ஏது? இல்லாதவஸ்துவை தியானிக்கிறதெப்படி? வஸ்துவே யில்லையெனில் அதற்கு சாமர்த்தியமெப்படி? சாமர்த்தியமே யில்லைஎனில், அதைத்தியானிக்கிற பேர்களுக்கு மாத்திரம் எங்கேயிருந்து சாமர்த்தியம்வரும்? என்கிற, சந்தேகங்களை சத்குரு

வின்மூலமாய் விசாரணைசெய்து நிவர்த்தித்துக் கொள்ளாமல் தனக்குத் தோன்றியபடி மஹாபுத்திசாலியைப்போல உளரும், மந்தபுத்தியையுடைய பேர்களின் வியாமோகத்தை விலக்குவதற்காக இந்தக் கண்டம் ஆரம்பிக்கப்படுகிறது.

1.

𑌶𑍍𑌰𑍁॥ 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌹 𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑌿𑌜𑌿𑌗𑍍𑌯𑍇 𑌤𑌸𑍍𑌯 𑌹
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌜𑌯𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌮𑌹𑍀𑌯𑌨𑍍𑌤 ।
𑌤 𑌐𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑌾𑌸𑍍𑌮𑌾𑌕𑌮𑍇𑌵𑌾𑌯𑌂𑌵𑌿𑌜𑌯𑍋
𑌽𑌸𑍍𑌮𑌾𑌕𑌮𑍇𑌵𑌾𑌯𑌂 𑌮𑌹𑌿𑌮𑍇𑌤𑌿 ॥ ௧॥

சுருதி ॥ ப்ரும்மஹதேவேப்யோ விஜிக்யே தஸ்யஹ
ப்ரும்மணோ விஜயேதேவா அமஹீயந்த ।
த ஐக்ஷந்தா ஸ்மாகமேவாயம்விஜயோ
ஸ்மாகமேவாயம் மஹிமேதி ॥ க॥

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌹 / ப்ரும்மஹ — (இதுவரைக்கும் உனக்குச் சொல்லிக்கொண்டுவந்ததுவும் இப்போது நீ அசத்தென்று (இல்லாததென்று) (வாதிக்கிறவுமான) அந்தப்பிர்ம்மமே

𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 / தேவேப்ய: — தேவதைகளுக்காக (அஸுரர்கள் அநேகதடவைகளில் தேவதைகளோடு யுத்தஞ்செய்து தேவதைகளைஜெயித்து அவர்களை சிறைபிடித்தும், இந்திரனையுங்கூட ஜெயித்து தாமாகவே இந்திராக்கினிகளாக தேவலோகங்களை ஆளுகிறதற் காரம்பித்தபோது தேவதைக ளெல்லோ

ரும் பகவானைப் பிரார்த்திக்க அப்போது பகவான் (ஆத்ம, பிர்ம்மம்)

| | |
|---|---|
| (𑌅𑌸𑍁𑌰𑌾𑌨𑍍)<br>அஸுரான் | அசுரர்களை |
| 𑌵𑌿𑌜𑌿𑌗𑍍𑌯𑍇<br>விஜிக்யே | ஜெயித்தது. |
| 𑌤𑌸𑍍𑌯, 𑌹, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃<br>தஸ்யஹபிர்ம்மண꞉ | அந்தப்பிர்ம்மத்துக்கே (உண்டான) |
| 𑌵𑌿𑌜𑌯𑍇<br>விஜயே | அசுரஜெயத்தில் |
| 𑌦𑍇𑌵𑌾𑌃<br>தேவா꞉ | (இந்திராக்கினிமுதலான) தேவதைகள் |
| 𑌅𑌮𑌹𑍀𑌯𑌨𑍍𑌤<br>அமஹீயந்த | மகிமையையடைந்தார்கள். |
| 𑌤𑍇<br>(தே) | அந்ததேவதைகள் |
| 𑌅𑌯𑌂<br>அயம் | இந்த |
| 𑌵𑌿𑌜𑌯𑌃<br>விஜய꞉ | ஜயமானது |
| 𑌅𑌸𑍍𑌮𑌾𑌕𑌂, 𑌏𑌵<br>அஸ்மாகம், ஏவ | நம்முடையதே என்றும், |
| 𑌅𑌯𑌂<br>அயம். | இந்த |
| 𑌮𑌹𑌿𑌮𑌾<br>மஹிமா | சாமர்த்தியமும் |

ஊஅஸாகஃ; ஏவ
ஊதி நம்முடையதென்றே என்றும்
அஸ்மாகம் ஏவ,இதி
ஐஷைக்ஷந்த
ஐக்ஷந்த பார்த்தார்கள் (நினைத்தார்கள்.)

தாத்பரியம்.

நீ எந்தவஸ்துவை அசத்தாகவும் இல்லாத வஸ்துவாகவும் நினைத்திருக்கிறாயோ தேவர்களுக்கெல்லாம் தேவனும், ஈசுவரர்களுக்கெல்லாம் ஈசனுமிருக்கிற அந்த பிர்ம்மமானது அநேகதடவைகளில் அஸுரர்களுக்கும், தேவர்களுக்கும் நடந்த யுத்தங்களில் தேவதைகளின் பக்ஷத்தில் ஜெயமும், அஸுரர்களுடைய பக்ஷத்தில் அபஜெயமும் உண்டாகும்படி செய்தது. இதற்குத் திருஷ்டாந்தமாக மஹிஷாஸுரன், சும்பன், நிசும்பன், சண்டமுண்டன், ரக்தபீஜன், மதுகைடபவர்கள் முதலானவர்களுக்கும், தேவர்களுக்கும் நடந்த யுத்தங்களில் அஸுரர்கள் இந்திரன்முதலான தேவர்களை ஜெயித்து தேவர்களைத் தங்கள் வேலைக்காரர்களாக்கி தேவலோகத்தை ஆண்டுகொண்டு வருகையில், தேவதைகள் பகவானைப்பற்றி பிரார்த்தித்தபோது பகவான் எல்லாவற்றிலும் சக்திஸ்வரூபமாக இருக்கிறானுகையால் இந்திரன், அக்கினி முதலான தேவர்களிடத்திலிருக்கிற தன் சக்திகளை எல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து ஒருபெரிய சக்திஸ்வரூபமாய்ச்செய்து அச்சக்திஸ்வரூபத்தை யநுப்பினர். அந்தஸ்வரூபமானது அஸுரர்களை ஜெயித்து தேவர்களுக்கு இராச்சியத்தைக் கொடுப்பித்தது இப்படி பரபிர்ம்ம

த்தினுல் அருப்பப்பட்ட சக்தியின் ஜயத்தினுல் அக்கினி யாதிதேவதைகளுக்கு மகிமையுண்டாயிற்று. எல்லாவற்றிலும் பிரத்தியகாத்ம ஸ்வரூபமாயிருக்கிற ஸர்வக்ஞனும், சகலப் பிராணிகளினுடைய ஸர்வசக்தி ஸ்வரூபனுமாயிருக்கிற ஜகதீசுரனுடைய (பிர்ம்மத்தினுடைய) மகிமையினுல் இந்த ஜெயமுண்டாயிற்றென்பதைத் தெரிந்துகொள்ளாத அக்கினி, வாயு, இந்திரன் முதலான தேவர்கள் இப்போதுண்டான ஜெயம் எங்களால்தான், ஆகையால் இது பிரத்யகாத்மாவாயிருக்கிற அந்தப் பிர்ம்மத்தினுடைய தல்லவென்று நினைத்து அதிக கர்வத்தை யடைந்திருந்தார்கள்.

---

## இரண்டாவது மந்திரம்.

### அவதாரிகை.

முதலாவது மந்திரத்தில் பிர்ம்மமானது தன்னுடைய ஸ்வசக்தியினுல் தேவர்களுக்குண்டான ஜெயத்தை தேவர்கள் தங்களுடையதாகவும், நிராகாரமாயும், நிர்விகாரியாயுமிருக்கிற பிர்ம்மத்திற்கும் இப்போது நமக்குண்டான ஜெயத்திற்கும் என்ன சம்பந்தமிருக்கிறது, ஆகையால் இச் செயமும் அதினுலுண்டாகும் மகிமைகளும் நம்முடையவைகளேயென்று கர்வித்தும், மித்தையான துரபிமானத்தை யுடைத்தாயிருக்கும் தேவர்களுக்கு அந்தக் கர்வத்தையும், துரபிமானத்தையும் போக்கடிக்கவேண்டி பரமதயாளுவான பகவானுகிய அப்பரப்பிர்ம்மமானது செய்த ஒரு அற்புதமான செய்கையை இம்மந்திரந் தெரிவிக்கிறது:—

2.

ஶ்ரு॥ 𑌤𑌦𑍍𑌧𑍈𑌷𑌾𑌂𑌵𑌿𑌜𑌜𑍍𑌞𑍌 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋𑌹𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍-
𑌬𑌭𑍂𑌵 𑌤𑌨𑍍𑌨𑌵𑍍𑌯𑌜𑌾𑌨𑌨𑍍𑌤 𑌕𑌿𑌮𑌿𑌦𑌂𑌯𑌕𑍍𑌷𑌮𑌿𑌤𑌿॥

சுருதி ॥ தத்தைஷாம் விஜஜ்ஞௌ தேப்யோ ஹ
ப்ராதுர்பபூவ தந்நவ்யஜாநந்த கிமிதம்யக்ஷமிதி॥

| | |
|---|---|
| 𑌤𑌤𑍍, 𑌹<br>தத், ஹ | அந்த பிர்ம்மஸ்வரூப மிருக்கல்லவா? |
| 𑌏𑌷𑌾𑌂<br>ஏஷாம் | (அக்கினி, வாயு, இந்திரன் முதலான) தேவர்களுடைய |
| (𑌮𑌿𑌥𑍍𑌯𑍇𑌕𑍍𑌷𑌣𑌂)<br>மித்யேக்ஷணம் | தப்பெண்ணத்தை, துரபிமானத்தை |
| 𑌵𑌿𑌜𑌜𑍍𑌞𑍌<br>விஜஜ்ஞௌ | தெரிந்துகொண்டது. |
| 𑌤𑍇𑌭𑍍𑌯𑌃 (𑌦𑍇𑌵𑍇𑌭𑍍𑌯𑌃)<br>தேப்யஃ தேவேப்யஃ | (இப்படி துரபிமானத்தையும், கர்வத்தையுமடைந்திருக்கிற) தேவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்வதற்காக |
| 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑍍𑌬𑌭𑍂𑌵<br>ப்ராதுர்பபூவ | (ஸ்வயோக மஹாத்மியத்தால் உண்டாக்கிக்கொண்ட அதிக அற்புதமானதும் மிகவும் ஆச்சரியமானதும் எல்லாரும் பார்த்துப் பயப்படக்கூடியவுமான ரூபத்துடன்) உத்பவமாயிற்று. |
| 𑌤𑌤𑍍<br>தத் | ஆவிர்பவித்த அந்த பிர்ம்மஸ்வரூபத்தை |
| 𑌕𑌿𑌂, 𑌇𑌦𑌂, 𑌯𑌕𑍍𑌷𑌂, 𑌇𑌤𑌿 | இந்த யக்ஷரூப மிப்படிப்பட்டதென்று (நம்முடைய கர்வத்தையும் துரபிமானத்தைப் போக்கடிப்பதற்கா |

இம், இதம், யக்ஷம், இதி — க அநுக்கிரகத்துடன், பூஜிக்கத்தகுந்த பெரிய உருவையெடுத்து நமக்காக ஆயுற்பவித்தரூபமென்று),

ந, வ்யஜாநந்த — தெரிந்துகொள்ளாமற் போனார்கள்.

தாத்பரியம்.

இந்தக்கண்டத்தின் முதலாவது மந்திரத்தில் சொல்லப்பட்ட பிர்ம்மஸ்வரூபமானது தெய்வாசுரயுத்தத்தில் நமக்குண்டான ஜெயமும், கீர்த்தியும் நம்முடைய ஸ்வசக்தியினாலல்லாமல், • பிரத்யகாத்ம ஸ்வரூபமான பரபிர்ம்மத்தினுடைய தல்லவென்ற தப்பெண்ணத்தினால் துரபிமானத்தை யுடைத்தாயிருக்கிற தேவர்களுடைய மனோ அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டது. ஆத்மதத்துவ ஸ்வரூப விசாரணையில்லாமையால் இப்பேர்க்கொத்த கர்வத்தையும் துரபிமானத்தையும் உடைத்தாயிருக்கிற அக்கினி, வாயு, இந்திரன் முதலான தேவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்வதற்காக தன்னுடைய யோகமாயையின் சாமர்த்தியத்தால் ஸ்வேச்சையால் உண்டாக்கிக்கொண்ட மிகவும் ஆச்சரியமான எல்லாரும்பார்த்து பயப்படக்கூடிய ஒரு பெரிய ஸ்வரூபத்துடன் இந்த பிர்ம்மமானது உத்பவமாயிற்று. அப்படியுண்டான அந்தப் பிர்ம்மஸ்வரூபத்தைத் தேவர்கள் தங்களுடைய நன்மைக்காக ஆயுற்பவித்ததாகத் தெரிந்துகொள்ளாமல் இதுவென்ன ஒரு பெரிய வியக்தியாயிருக்கிறது, என்று பிரமித்தார்கள்.

பிர்ம்மமானது (பகவான், ஆத்மா) பிறப்பற்றதான போதிலும் தன்னிடத்திலிருக்கிற மாயா சக்தியால் தான் ஸ்வேச்சையாய் உண்டாகிறதென்பதற்கு கீதா வசனம்.

ஶ்லோ॥ அஜோ஽பி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந் । ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா॥

(பகவத்கீதா. ௪-௬, ஶ்லோ-௬.)

---

## மூன்றாவது மந்திரம்.

### அவதாரிகை.

இரண்டாவது மந்திரத்தில் சொல்லப்பட்ட யக்ஷ ரூபந்தரித்த பிர்மத்தைப்பார்த்துப் பிரமையை யடைந்த தேவர்கள் இந்த ரூபத்தைப் பார்க்கப் பார்க்கப் பயமுண்டாகி இதுவென்ன விபரீதமாயிருக்கிறது? இது ஏதோ ஒரு அபாயத்திற்குக் காரணமாயிருக்கிறது. ராக்ஷஸர்களுடன் யுத்தஞ்செய்து அவர்களை ஜெயித்துவிட்டபடியால் நமக்கொரு பயமுமில்லையென்று எண்ணிக்கொண் டிருக்கும்போதே இதுவொன்றுவந்து சேர்ந்தது, என்று தேவர்கள் ஒருவருக்கொருவர் பயத்துடன் ஆலோசித்துக் கடைசியாய் அக்கினியைப்பார்த்துச் சொல்லுகிற விவரத்தை இம் மந்திரம் தெரிவிக்கிறது.

மூ॥ தேऽக்நிமப்ருவந் ஜாதவேத ஏதத்விஜாநீஹி கிமேதத்யக்ஷமிதி॥ ௩॥

தேऽக்நிமப்ருவன் ஜாதவேத ஏதத்விஜாநீஹி
கிமேதத்யக்ஷமிதிததேதி. ௩||

3.

| | |
|---|---|
| தெ தே | (பகவானுடைய (பரமாத்மாவின்) மஹிமையை தெரிந்துகொள்ளாமையால் பயத்தை யடைந்து, நிஜ சங்கதியைத் தெரிந்துகொள்ள இச்சையுடைய) தேவதைகள் |
| அக்நிம் | (தேவதைகளுக்கு முன்நடக்கிற) அக்கிநிஹோத்திரனைப்பார்த்து |
| ஹேஜாதவேதஃ! | (வேதங்களை அநேகவிதஞானங்களினல் தெரிந்துகொள்ளக்கூடிய சகல வேதாத்மகமான ஜாதவேத என்கிற மாறுபேரையுடைய) ஓ அக்கினிதேவா! |
| ஏதத், யக்ஷம் | எங்கள் கண்களுக்குக் காணப்படுகிற இந்த பெரியஉருவத்தை |
| கிம் ? | இன்னதென்று |
| ஏதத் | இதை |
| (த்வம்) | நீ |
| விஜாநீஹி, இதி | தெரிந்துகொள் என்று |
| அப்ருவன் | சொன்னார்கள். |
| (அக்நிஃ) | அக்கினியும் |

தயா, இதி — அப்படியே யாகட்டும் என்று பதில்
ததா, இதி — சொல்லிற்று.

தாத்பரியம்.

நன்மையாகிலும் ஜெயமாகிலும் ஒருவனுக்குண்டானால் அப்பொழுது அது தன்னுடைய சாமர்த்தியத்தாலுண்டானதாக எண்ணுகிறது சுவபாகமாகையால், அசுரர்களுக்கும் தேவதைகளுக்கும் நடந்த யுத்தத்தில் உண்டான ஜெயத்தை தேவதைகள் தங்களுடையதாக எண்ணியிருக்கையில், அவர்களின் எதிரில் ஒரு பெரிய உருவத்தை எடுத்திருக்கிற பகவானுடையமகிமையைத் தெரிந்துகொள்ளாமையால், பார்த்து பயத்தையடைந்து நானுவிதங்களான ஆலோசனைசெய்து இவ்வுருவத்தின் நிஜத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற எண்ண முடையவர்களாகித் தங்களுக்கு முன்னடக்கிற சகல வேதாத்மக ஸ்வரூபனுகிய அக்கினிதேவனைப் பார்த்து ஒஜாதவேதாவே! எங்களுடைய எதிரில் திருஷ்டிகோசரமாய்க் காணப்படுகிற இந்தப் பெரிய உருவம் இன்னதென்பதைத் தெரிந்து கொள்ளுமென்று தேவதைகள் சொல்ல, அக்கினிஹோத்திரனும் அந்தப்படியே தெரிந்துகொண்டு வருகிறேன் என்று பிரத்தியுத்தரம் சொன்னுன்.

---

## நான்காவது மந்திரம்.

அவதாரிகை.

இவ்விதமாக தேவதைகளுக்குச் சொல்லிவிட்டு உடனே புரப்பட்டு எதிரில்காணுகிற அந்தப்பெரிய உருவத்தினிடம் சென்றபோது அவ்வுருவத்திற்கும்

அக்கினிஹோத்திரனுக்கும் நடந்த சங்கதிகளைப்பற்றி இம்மந்திரமும் ஐந்து ஆருவது மந்திரங்களும் தெரியச் செய்கின்றன. அதாவது:—

4

𑌤𑌦𑌭𑍍𑌯𑌦𑍍𑌰𑌵𑌤𑍍𑌤𑌮𑌭𑍍𑌯𑌵𑌦𑌤𑍍 𑌕𑍋𑌽𑌸𑍀𑌤𑍀 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌾
𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑍍𑌯𑌬𑍍𑌰𑌵𑍀𑌜𑍍𑌜𑌾𑌤𑌵𑍇𑌦𑌾 𑌵𑌾 𑌅𑌹
𑌮𑌸𑍍𑌮𑍀𑌤𑍀॥ ௪॥

ததப்யத்ரவத்தமப்யவதத் கோஸீதி அக்நிர்வா அஹமஸ்மீத்யப்ரவீத் ஜாதவேதாவா அஹமஸ்மீதி॥ ௪॥

𑌤𑌤𑍍
தத் — அந்த (பிர்ம்மஸ்வரூபமான பெரிய பூதம்போல் காண்கிற யக்ஷரூபத்தைநோக்கி)

(𑌅𑌗𑍍𑌨𑌿𑌃)
அக்நி: — அக்கினிதேவனானவன்

𑌅𑌭𑍍𑌯𑌦𑍍𑌰𑌵𑌤𑍍
அப்யத்ரவத் — சென்ருன். (போய் பயத்தினுல் ஒன்றும் தோணுமல் மௌனமாய் நின்ருன்.)

𑌤𑌮𑍍
தம் — (தன்னைநோக்கி வந்திருக்கிற அக்கினியைப்பார்த்து) அப்பெரியபூதம்

(𑌤𑍍𑌵𑌂) 𑌕𑌃, 𑌅𑌸𑌿, 𑌇𑌤𑌿
(த்வம்,) க:, அஸி, இதி — நீயார் என்று

𑌅𑌭𑍍𑌯𑌵𑌦𑌤𑍍
அப்யவதத் — (யக்ஷரூபமான பிர்ம்மமானது) கேட்டது;

𑌅𑌹𑌮𑍍
அஹம் — நான்

| | |
|---|---|
| ஃஜ்ரிஃ, வா<br>அக்நிঃ, வா | பிரசித்தமாயுள்ள அக்கினி என்கிற பே ருடையவனாக |
| ஃவஸி, ஐதி<br>அஸ்மி, இதி | இருக்கிறேன் என்று |
| ஃஷ்ருவீக<br>அப்ரவீத் | சொன்னான். |
| (ஃவபிவ)<br>அபிச | பின்னும் |
| ஃஹஂ<br>அஹம் | நான் |
| ஜாதவெஃா, வா<br>ஜாதவேதா, வா | வேதாத்மகமான பிரசித்தமாயுள்ளஜா தாவேதா என்கிற |
| ஃவஸி, ஐதி<br>அஸ்மி, இதி | (பேருடையவனாயும்) இருக்கிறேனெ ன்றும் (சொன்னான்.) |

தாத்பரியம்.

தேவதைகளி னிடத்தில் சிலவுபெற்றுக்கொண்டு போன அக்கினிஹோத்திரனானவன் தன்னுடைய சாமர்த்தியத்தைப்பற்றி தானே புகழ்ந்துகொண்டும், எதிரில் காணப்படுகிற யக்ஷரூபத்தை பார்த்து திகிலடைந்தவனாக இருந்தபோதிலும், தேவதைகளினிடத்தில், "நான்போய் தெரிந்துகொண்டு வருகிறேன்" என்று ஒப்புக்கொண்டு விட்டோமே என்கிற வாக்குதத்தத்தை நினைத்து மனதை தைரியப்படுத்திக்கொண்டு யக்ஷரூபமாகிய பிர்ம்மத்தைச் சமீபித்த உடனே வாய்பேசவராமல் கைகால் நடுக்கங்கொண்டு ஸ்தம்பித்து நின்ற அக்கினியைப்பார்த்து "யார் நீ" என்று பிர்ம்மமானது கேட்க, அப்பெரிய உருவம் முதலில் பேசினபடியால் கொஞ்சம் தைரியத்தை

யடைந்து மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டு, யாரா? என்னைத் தெரியாது? எங்கும் பிரசித்தியடைந்த அக்கினிதேவனுக்கும், என்னை வேதாத்மகமான ஜாத வேதனென்றும் சொல்லுவார்கள் என்றான்.

---

## ஐந்தாவது மந்திரம்.

### அவதாரிகை.

இப்படியாகச் சொன்ன அக்கினிஹோத்திரனைப் பார்த்து யாக்ஷரூபமாகிய பரபிர்ம்மம் சொல்லுகிறதாவது:—

5

தஸ்மிஂஸ்த்வயிகிஂவீர்யமிதி அபீதஂஸர்வஂதஹேயஂ
யதிதஂப்ருதிவ்யாமிதி॥ ரு॥

தஸ்மிம் ஸ்த்வயி கிம் வீர்யமித்யபீதக் ஸர்வம்தஹேயம்
யதிதம் ப்ருதி வ்யாமிதி॥ ரு॥

| | |
|---|---|
| தஸ்மிந்<br>தஸ்மின் | அப்படிப்பட்ட பிரசித்தமான பேரையுடைய |
| த்வயி<br>த்வயி | உன்னிடத்தில் |
| கிம், வீர்யம், (அஸ்தி) இதி<br>கிம், வீர்யம் (அஸ்தி) இதி | என்னசாமர்த்தியமிருக்கிறதென்று |
| (யக்ஷேண, ஷ்டஃ, ஸஃ)<br>யக்ஷேண, ப்ருஷ்டஃ, ஸஃ | பெரும்பூதமாகத்தோன்றிநிற்கிற பிர்ம்மத்தினால் கேட்கப்பட்ட அக்கினிஹோத்திரனைவ்ன், |

| | |
|---|---|
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌂<br>ப்ருதிவ்யாம் | இந்தப்பூமி அன்தரிக்ஷம் முதலான சகலத்திலுமிருக்கிற |
| 𑌯𑌤𑍍, 𑌇𑌦𑌂<br>யத், இதம் | எந்தஇந்த ஸ்தாவரஜங்கம ரூபங்களாயுள்ள |
| 𑌇𑌦𑌂 ( 𑌤𑌤𑍍 ) 𑌸𑌰𑍍𑌵𑌂, 𑌅𑌪𑌿<br>இதம், (தத்) ஸர்வம், அபி | இந்தச்சகலமானவைகளையும் |
| 𑌦𑌹𑍇𑌯𑌂, 𑌇𑌤𑌿<br>தஹேயம், இதி | சாம்பலாய்தகித்துவிடுவேனென்று |
| (𑌅𑌵𑌦𑌤𑍍)<br>அவதத் | சொன்னான். |

தாத்பரியம்.

தன்னை நோக்கிவந்து ஒன்றும் பேசாமலிருக்கிற அக்கினியைப்பார்த்து, பெரியயக்ஷ உருவத்தை எடுத்திருக்கிற பிர்ம்மமானது உன்னிடத்தில் பிரசித்தியை உண்டாக்கக்கூடிய சாமர்த்திய மென்ன இருக்கிறது என்று கேட்டது. இந்தப்பூமி அந்தரிக்ஷம் முதலான சமஸ்த உலகங்களையும், அதிலுள்ள சகல ஸ்தாவர ஜங்கமங்களான எல்லாவற்றையும் சாம்பலாகச் சுட்டுவிடக்கூடிய வல்லமை என்னிடத்தி லிருக்கிறதென்று அக்கினிஹோத்திரன் சொன்னான்.

## ஆறாவது மந்திரம்.

### அவதாரிகை.

அக்கினிதேவனாகிய ஜாதவேதன் சொன்னதற்புகழ் (ஆத்மஸ்துதியான) வார்த்தைகளைக்கேட்ட அந்தப் பெரிய உருவந் தரித்திருக்கும் பரப்பிர்ம்மானது, அக்கினியின் கர்வத்தைத்தணித்து அதற்கு நன்மையை யுண்டாக்கும் பொருட்டு சொல்லுகிறதாவது:—

**6**

𑌤𑌸𑍍𑌮𑍈 𑌤𑍃𑌣𑌂 𑌨𑌿𑌦𑌧𑌾𑌵𑍇𑌤𑌦𑍍𑌦𑌹𑍇𑌤𑌿 𑌤𑌦𑍁𑌪𑌪𑍍𑌰𑍇
𑌯𑌾𑌯 𑌸𑌰𑍍𑌵𑌜𑌵𑍇𑌨 𑌤𑌨𑍍𑌨 𑌶𑌶𑌾𑌕 𑌦𑌗𑍍𑌧𑍁𑌂 𑌸 𑌤𑌤 𑌏𑌵 𑌨𑌿
𑌵𑌵𑍃𑌤𑍇 𑌨𑍈𑌤𑌦𑌶𑌕𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌯𑌦𑍇𑌤𑌦𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑌿𑌤𑌿॥

தஸ்மைத்ருணம் நிததாவேதத்தஹேதி ததுபப்ரேயாய
ஸர்வஜவேந தந்நஶஶாகதக்தும் ஸததஏவநிவவ்ருதே
நைத தஶகம்விஜ்ஞாதும் யதேதத்யக்ஷமிதி॥ ௬॥

| | |
|---|---|
| (𑌤𑌰𑍍𑌹𑌿, 𑌤𑍍𑌵𑌂) தர்ஹி, த்வம் | அப்படியானால், நீ |
| 𑌏𑌤𑌤𑍍, 𑌤𑍃𑌣𑌂, (𑌮𑌾𑌤𑍍𑌰𑌂) ஏதத், த்ருணம், (மாத்ரம்) | இத்துரும்பை மாத்திரம் |
| 𑌦𑌹, 𑌇𑌤𑌿 தஹ, இதி | என்னெதிரில் சுட்டுவிடு பார்ப்போமென்று |
| 𑌤𑌸𑍍𑌮𑍈 தஸ்மை | (ஐந்தாவதுமந்திரத்தில்சொல்லப்பட்டபிரகாரம் அபிமானத்தையும், கர்வத்தையும் அடைந்திருக்கிற)அந்த அக்கினியின் பொருட்டு (நெருப்புக்கு முன்னிலையில்) |

| | |
|---|---|
| நிததெள | (அந்த யக்ஷரூபந்தரித்த பிர்ம்மமானது) போட்டது. |
| தத் | அத்துரும்பைநோக்கி |
| ஸர்வஜவேந | (பிரபஞ்சங்களெல்லாவற்றையும்சாம்பலாக்கிவிடும் எனக்கு, இது எம்மாத்திரம்என்கிற கர்வத்துடனும், மகா உர்ச்சாகத்துடனும்) அதிவேகமாய் |
| ஸ: | அந்த அக்கினிஹோத்திரன் |
| உபப்ரேயாய | துரும்பின்சமீபமாகச் சென்றான். |
| தத் | அந்த அக்கினிதேவன் (துரும்பை) |
| தக்தும் | எரிக்க |
| ந, ஶஶாக | சாமர்த்தியமில்லாதவனானான். |
| தத: | பிற்பாடு |
| நிவவ்ருத, ஏவ | (தன்னாலாகாமையால் கர்வபங்கத்துடன்) திரும்பிவிட வேண்டியதாயிற்று. |
| தேவான் | (இவ்விதமாய் திரும்பிவந்த அக்கினி) தேவதைகளைப்பார்த்து |
| ஏதத், யக்ஷம் | இந்த எதிரிலிருக்கிற பெரியசெரூபத்தை |
| யத், இதி | எப்படிப்பட்டதென்று |

| | |
|---|---|
| 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌮𑍍<br>விக்ஞாதும் | தெரிந்துகொள்ளுகிறதற்கு |
| 𑌨, 𑌅𑌶𑌕𑌮𑍍, (𑌇𑌤𑌿)<br>ந, அஶகம், இதி | என்னால்முடியவில்லையென்று |
| (𑌉𑌕𑍍𑌤𑌵𑌾𑌨𑍍)<br>உக்தவான் | சொன்னான். |

தாத்பரியம்.

இவ்விதமாய் கர்வத்தை யடைந்திருக்கிற அக்கினி ஹோத்திரனைப்பார்த்து இந்த யக்ஷரூபந் தரித்திருக்கிற பெரிய உருவம் சொல்லுகிறதாவது. ஓ அக்கினி ஹோத்திரனே! பிரபஞ்சங்க ளெல்லாவற்றையும் தகிக்கக்கூடிய சாமர்த்தியம் இருக்கிறது நிஜமேயானால், இதோ இத்துரும்பை என்னெதிரில் நீ எரித்துவிடு பார்ப்போம் என்றது. அதைக்கேட்ட அக்கினி ஹோத்திரன், எல்லா உலகங்களையும் க்ஷணத்தில் தகிக்கிற எனக்கு இதுவொரு பெரிதாஎன்று மிகுந்த உற்சாகத்துடன் துரும்பைச் சமீபித்து அதை எரிக்கும்படி தனக்குள்ள எல்லாச் சக்தியையும் உபயோகித்தும், அத்துரும்பை எரிக்கச் சாமர்த்திய மில்லாமல் தன்னுடைய கெர்வமடங்கி மிகுந்த அவமானத்துடன் தேவதைகளினிடம் திரும்பச்சென்று, அய்யா! இந்த எதிரிலிருக்கிற அந்தப் பெரும் சொரூபத்தினுடைய நிஜஸ்திதியை இப்படிப்பட்டதென்று தெரிந்துகொள்ள என்னால் முடியாமற் போயிற்றென்று அக்கினி ஹோத்திரன் சொன்னான்.

## ஏழாவதுமந்திரம்.

அவதாரிகை.

இவ்விதமாக் மகாடாம்பீகமாய் தன்னேயும் தன்னுடைய சக்தியையும் புகழ்ந்துகொண்டு கர்வித்திருந்த அக்கினியின் கர்வபங்கமாயினும், தேவதைகள் அவ் விஷயமாய் ஆலோசியாமல், மறுபடியும் வாயுவை யனுப்பினுர்கள். அந்த வாயுவுக்கும் அப்பெரிய உருவத்திற்கும் நடந்த சங்கதிகளை இந்த மந்திரத்திலும் இனிமேல் வரபோகிற எட்டு, ஒன்பது, பத்தாவது மந்திரங்களிலும் தெரியச்செய்யப் படுகிறது. எப்படியெனில்:—

7.

அ஥வாயு஫ப்ருவந் வாயவேத஦்விஜாநீஹி
கிமேத஦்யக்ஷமிதி ததேதி॥ எ॥

அதவாயுமப்ருவன் வாயவேதத்விஜாநீஹி
கிமேதத்ய க்ஷமிதித தேதி॥ எ॥

| | |
|---|---|
| அ஥ அத | பிற்பாடு (அக்கினி கர்வபங்க மடைந்த பிற்பாடு) |
| தே த | அந்தேவதைகள் |
| வாயு஫ வாயும் | வாயுவைப்பார்த்து |
| ஹே வாயோ! ஹே வாயோ! | ஓவாயுதேவனே! |
| ஏத஦் ஏதத் | இந்த எதிரேகாணப்படுகிற |

| | |
|---|---|
| (யக்ஷம்) யக்ஷம் | பெரியபூதத்தை |
| (ஏதத், கிம்) ஏதத், கிம் | இது இன்னதென்று |
| (த்வம்) த்வம் | நீ |
| (விஜாநீஹி, இதி) விஜாநீஹி, இதி | தெரிந்துகொண்டுவா என்று |
| (ஸ:) அப்புருவன் | சொன்னார்கள். |
| (வாயு:) வாயு: | வாயுவும் |
| (ததா, இதி) ததா, இதி | அப்படியே ஆகட்டும் என்றான். |

தாத்பரியம்.

இவ்விதமாய் தேவதைகள் அக்கினியை அநுப்பி அவனால் தெரிந்துகொள்ளமுடியாமற் போன போதிலும், மறுபடியும் வாயுவைஅழைத்து நீ போய் எதிரேநிற்கிற இந்த மகாபூதத்தின் வரலாற்றைத்தெரிந்து கொண்டுவா வென்றுசொல்ல, அந்தவாயுவும் அப்படியே ஆகட்டும் என்றனன்.

---

## எட்டாவது மந்திரம்.

அவதாரிகை.

தேவதைகளிடத்தில் அம்மகாபூதத்தின் வரலாற்றைத்தெரிந்துகொண்டு வருகிறேனென்ற வாயு பிற்பாடு நடத்தின சங்கதியை இம்மந்திரம் தெரிவிக்கிறது. அதாவது;—

8.

தத³ப்⁴யத்³ரவத்தமப்⁴யவத³த்கோऽஸீதி வாயுர்வா
அஹமஸ்மீத்யப்³ரவீந்மாதரிஶ்வா வா அஹமஸ்மீதி॥ ௮॥

ததப்யத்ரவத்தமப்ய வதத்கோऽஸீதிவாயுர்வா।
அஹமஸ்மீத்யப்ரவீந்மா தரிஶ்வாவா அஹமஸ்மீதி॥

| | |
|---|---|
| தத்³ தத் | வாயுவானது, அந்தமஹா பூதத்தை நோக்கி |
| அப்⁴யத்³ரவத் அப்யத்ரவத் | சென்றது. |
| தம் தம் | தன்னைநோக்கி வந்திருக்கிற வாயுவைப்பார்த்து |
| (தத்³) தத் | அந்த மஹாபூதமானது |
| (த்வம்) வம் | நீ |
| க:, அஸி, இதி கஃ, அஸி, இதி | யார் என்று |
| அப்⁴யவத³த் அப்யவதத் | கேட்டது. (அதற்கு வாயு) |
| அஹம் அஹம் | நான் |
| வாயு:, வா வாயுஃ, வா | (வாநாத்-மநாத்-மயநாத் = வாயுஃ) பிரசித்தமானவாயுவென்றபேரையுடையவனாக, |
| அஸ்மி, இதி அஸ்மி, இதி | இருக்கிறேன் என்று |
| அப்³ரவீத் அப்ரவீத் | சொல்லிற்று. |

| | |
|---|---|
| அஹம் | நான் |
| மாதரிஶ்வா, வா | (மாதரி அந்தரிக்ஷே ஶ்வயதீதி—மாதரிஶ்வா) எல்லாவற்றையும் ஸ்வீகரித்து ஆகாயத்தில் சஞ்சரிக்கிறவனென்கிற பேர்போன மாதரிஶ்வா என்கிற பேருடையவனாக |
| அஸ்மி, இதி, (அப்ரவீத்) | இருக்கிறேன் என்று (சொல்லிற்று) |

தாத்பரியம்.

தேவதைகளிடத்தில் விடைபெற்றுக்கொண்டுவந்த வாயுவானது அந்த மஹாபூதத்தினிடம்சென்று அவ்வுருவத்தைச் சமீபித்தவுடன் ஒன்றும் தோன்றாமல் மௌனமாய் நின்றது. இப்படியாக தன்னிடத்திற்கு வந்தும் பேசாமலிருக்கிற வாயுவைப் பார்த்து, நீ யார் என்று அந்த மஹாபூதம்கேட்டது. முதலில் அதுபேசினவுடன் மனதைதைரியப்படுத்திக் கொண்டு, என்பேர் பிரசித்தமான வாயு வென்பார்கள், எல்லாவற்றையும் ஸ்வீகரித்து அந்தரிக்ஷத்திற்குக் கொண்டுபோகக்கூடிய சாமர்த்தியமுடையவனாகையால், என்னையே மாதரிஶ்வனென்று சொல்லிகொள்வார்கள் என்று வாயுச்சொல்லிற்று.

## ஒன்பதாவது மந்திரம்.

அவதாரிகை.

இப்படி எல்லாம் நீ பிரசித்தமானதாயிருக்கக் கூடியதற்குக்காரணமென்ன. உன்னிடத்தில் என்ன அப்பேர்க்கொத்த பெருமையிருக்கிறதென்று பூதமானது கேட்கப்போகிற கேள்வியையும், அதற்கு வாயு சொல்லும் பிரத்தியுத்தரத்தையும் இம்மந்திரம் தெரிவிக்கிறது. அதாவது:—

9

தஸ்மிம்ஸ்த்வயிகிம்வீர்யமித்யபீதம் ஸர்வமாததீயம் யதிதம் ப்ருதிவ்யாமிதி॥ ௯॥

தஸ்மிம் ஸ்த்வயிகிம்வீர்ய மீத்யபீதக்ஸ ர்வமாததீயம்।
யதிதம் ப்ருதிவ்யாமிதி॥ ௯॥

| | |
|---|---|
| தஸ்மிந் தஸ்மின் | அப்படிப்பட்டப் பிரசித்தமான பேரையுடைய |
| த்வயி த்வயி | உன்னிடத்தில் |
| கிம், வீர்யம், அஸ்தி, இதி கிம், வீர்யம், அஸ்தி, இதி | என்ன சாமர்த்திய மிருக்கிறதென்று |
| (தேந) தேந | மஹா பூதமாக உருவம் கொண்டிருக்கும் அப்பிர்ம்மத்தினுல் |
| (ப்ருஷ்டஃ) ப்ருஷ்டஃ | கேட்கப் பட்டதாய் |

| | |
|---|---|
| (𑌸𑌃) ஸ: | அந்த வாயுவானது |
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑍍 ப்ருதிவ்யாம் | பூமியில் |
| 𑌯𑌤𑍍, 𑌇𑌦𑌮𑍍 யத், இதம் | இந்த ஸ்தாவரஜங்கமங்களா யிருக்கிற வைகளெவைகளோ |
| 𑌇𑌦𑌂, 𑌸𑌰𑍍𑌵𑌂, 𑌅𑌪𑌿 இதம், ஸர்வம், அபி | அந்த இவைகளெல்லவற்றையுங்கூட |
| 𑌆𑌦𑌦𑍀𑌯𑌂, 𑌇𑌤𑌿 ஆததியம், இதி | கிரகிப்பேன் என்று |
| (𑌅𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍) அப்ரவீத் | சொல்லிற்று |

தாத்பரியம்.

உன்னை எல்லோரும் பிரசித்தமாய் தெரிந்துகொள்ளக்கூடிய சாமர்த்திய விசேஷம் உன்னிடத்திலென்ன இருக்கிறதென்று தன்னை நோக்கிவந்து அருகில் ஒன்றும் பேசாமல் நிற்கிற வாயுவைப்பார்த்து மஹாபூதமாகத்தோன்றி நிற்கும் பிர்ம்மமானதுகேட்க, இப்பிரபஞ்சத்தின் கண்ணுள்ள ஸ்தாவர ஜங்கமாதி எல்லா வஸ்துக்களையும் கிரகித்து அந்த ரிக்ஷத்திற்குக் கொண்டு போகக்கூடிய சாமர்த்தியம் எனக்குண்டென்று வாயுச்சொல்லிற்று.

---

## பத்தாவது மந்திரம்.

### அவதாரிகை.

இவ்விதமாக வாயுவானது சொன்னதற்புகழ் (ஆத்மஸ்துதியான) வார்த்தைகளைக்கேட்ட அந்தப் பெரும்பூதமான உருவந்தரித்த பிர்ம்மமானது, இந்த வாயுவின் கர்வத்தை அடக்கி அதற்கு நன்மையை உண்டாக்க நினைத்துச் சொல்லுகிறதாவது:—

10.

தமெஸ்ரூ தூணஂநிஉயாவெ தஉாஉசஹெஹுதி
தஉ-வெ௵யாயஸவ-ஜவெ நதூஸாகாஉா த-ஂ
ஸ தத ஸவநிவவுநெ தமெ நதஉஸகஂவிஜ்ஞா த-ஂ
யமெஉ தஉ௵க்ஷஇதி॥ க0॥

தஸ்மைத்ருணம்நிததாவேததா தத்ஸ்வேதி
ததுபப்ரேயாயஸ்ர்வஜவேந் தந்நஸஸாகாதாதும்
ஸதத்ஏவநிவவ்ருதே நைததசக்கம்விக்ஞாதம்
யதேதத்யக்ஷமிதி॥ க0॥

(தஹி-, கஉ) தர்ஹி, த்வம் — அப்படியானல், நீ

வஉ தஉ, தூணஂ, (ஊாதூ) ஏதத், த்ருணம், (மாத்ரம்) — இத்துரும்பைமாத்திரம்

ஆஉசஸ, ஐதி ஆதத்ஸ்வ, இதி — என்னெதிரில் கிரஹி (எடு) பார்ப் போமென்று

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌮𑍈<br>தஸ்மை | (அபிமானத்தையும், கர்வத்தையும் அடைந்திருக்கிற) அந்த வாயுவின் பொருட்டு (வாயுவின் முன்னிலையில்) |
| 𑌨𑌿𑌦𑌧𑍌<br>நிததௌ | (அந்த யக்ஷரூபந்தரித்திருக்கும் பிர்ம்மானது) போட்டது. |
| 𑌤𑌤𑍍<br>தத் | (அத்துரும்பைநோக்கி) வாயுவானது |
| 𑌸𑌰𑍍𑌵𑌜𑌵𑍇𑌨<br>ஸர்வஜவேந | (பிரபஞ்சங்களெல்லாவற்றையும் வேர்ப்பிடுங்காய் எறிந்துவிடும் எனக்கு இதுவொரு பொருட்டா வென்கிற கர்வத்துடனும், மகா உற்சாகத்துடனும்) அதிவேகமாய் |
| 𑌸𑌃<br>ஸ: | அந்த வாயுவானது |
| 𑌉𑌪𑌪𑍍𑌰𑍇𑌯𑌾𑌯<br>உபப்ரேயாய | துரும்பின் சமீபமாகச்சென்றது |
| 𑌤𑌤𑍍<br>தத் | (அத்துரும்பை) வாயுவானது |
| 𑌆𑌦𑌾𑌤𑍁𑌂<br>ஆதாதும் | எடுக்கிறதற்கு, அசைக்கிறதற்கு |
| 𑌨, 𑌶𑌶𑌾𑌕<br>ந, ஶஶாக | சாமர்த்தியமில்லாமற் போயிற்று. |
| 𑌤𑌤𑌃<br>ததஃ | பிற்பாடு |
| 𑌨𑌿𑌵𑌵𑍃𑌤, 𑌏𑌵<br>நிவவ்ருத, ஏவ | (தன்னாலாகாமையால் கர்வபங்கத்துடன்) திரும்பி விடவேண்டியதாயிற்று, |

| | |
|---|---|
| (தேவாந) தேவான் | (இவ்விதமாய்த் திரும்பிவந்த வாயுவானது) தேவதைகளைப்பார்த்து |
| ஏதத், யக்ஷம் ஏதத், யக்ஷம் | எதிரிலிருக்கிற இந்தப் பெரும் யக்ஷ சொரூபத்தை |
| யத், இதி யத், இதி | இன்னதென்று |
| விஜ்ஞாதும் விக்ஞாதும் | தெரிந்து கொள்ளுகிறதற்கு |
| ந, அஶகம், இதி ந, அஶகம், இதி | என்னால் முடியவில்லை யென்று |
| (உக்தவாந) உக்தவான் | சொல்லிற்று. |

## தாத்பரியம்.

இவ்விதமாய் கர்வத்தை யடைந்திருக்கிற வாயுவைப்பார்த்து யக்ஷரூபந் தரித்திருக்கிற இந்தப்பெரிய உருவமான பிர்ம்மமானது சொல்லுகிறதாவது:—ஓ மாதிரிஸ்வனென்கிற பேரையுடைய வாயுவே! பிரபஞ்சங்க ளெல்லாவற்றையும் வேர்ப்பிடுங்காய்ப் பிடுங்கி எறியக்கூடிய சாமர்த்திய மிருக்கிறது நிஜமேயானால், நீ இந்தத்துரும்பை என்னெதிரில் எடுபோர்ப் போமென்று சொல்லி ஒரு துரும்பை வாயுவினெதிரில்போட்டது. அவ் வசனங்களைக்கேட்ட வாயு, எல்லாவற்றையும் பஞ்சுபோலூதி விடுகிறவனுக்கு இது வொரு பெரிதாவென்று மிகுந்த உற்சாகத்துடன் துரும்பைச் சமீபித்து அதை யசைக்கும்படி தனக்குள்ள எல்லா சக்தியையும் உபயோகித்தும், அத்துரும்பை அசைக்க முடியாமல் தன்னுடைய கர்வமடங்கி மிகுந்த

அவமானத்துடன் தேவதைகளிடம் திரும்பச்சென்று அய்யா! இந்த எதிரிலிருக்கிற அந்தப் பெரும் ஸ்வரூபத்தினுடைய நிஜஸ்திதியை இப்படிப் பட்டதென்று தெரிந்துகொள்ள என்னால் முடியாமற் போயிற்றென்று வாயுவானது சொல்லிற்று.

---

## பதினொருவது மந்திரம்.

### அவதாரிகை.

இவ்விதமாக மிகுந்த டம்பத்துடன் தன்னையும் தன்னுடைய சக்தியையும் புகழ்ந்து கொண்டு கர்வித்திருந்த வாயுவினுடைய கர்வமுங்கூட அடங்கின பிற்பாடு, தேவதைகள் மறுபடியும் இந்திரனை யனுப்பினார்கள். இவ்விந்திரன் புரப்பட்டுப் போனவுடன் நடந்த சங்கதியை இந்த மந்திரம் தெரியச் செய்கிறது. அதாவது:—

**11.**

𑌅𑌥𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌮𑌘𑌵𑌨𑍍𑌨𑍇𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿𑌕𑌿𑌮𑍇
𑌤𑌦𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑌿𑌤𑌿𑌤𑌥𑍇𑌤𑌿𑌤𑌦𑌭𑍍𑌯𑌦𑍍𑌰𑌵𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌿𑌰𑍋
𑌦𑌧𑍇॥ ௧௧॥

சுருதி|| அதேந்திரமப்ருவன்மகவன்னேதத்விஜாநீஹிகிமே
தத்யக்ஷமிதிததேதிததப்யத்ரவத்தஸ்மாத்திரோததே||

𑌅𑌥 (வாயுகூட கர்வபங்கத்தை யடைந்த)
அத பிற்பாடு

| | |
|---|---|
| ஐ௺ஂ<br>இந்திரம் | (பரமைச் சுரியங்களையுடையவனும் திருலோகநாதனுமான) இந்திரனைப் பார்த்து |
| (தெ)<br>தே | அந்ததேவதைகள் |
| ஹெ ஊவவநு!<br>ஹே, மகவன் | சகலலோகபூஜ்யனான ஓ தேவேந்திரா |
| (ஸ்ஂ)<br>த்வம் | நீ |
| வள_தஶ, யக்ஷஂ<br>ஏதத், யக்ஷம் | எதிரில் காணப்படுகிற இந்த பெரும் பூதத்தை |
| கிஂ<br>கிம் | இன்னதென்று |
| விஜா_நீஹி, ஊ_தி<br>விஜாநீஹி, இதி | தெரிந்துகொள்ளென்று |
| அவுரு வநு<br>அப்ருவன் | சொன்னார்கள். |
| (ஸஂ)<br>(ஸ:) | அதற்கு இந்திரனும் |
| _தயா, ஊ_தி<br>ததா, இதி | அப்படியே ஆகட்டுமென்று சொல்லி |
| _தஶ<br>தத் | அந்த மஹாபூதத்தை நோக்கி |
| அஹ்ஜ்ஊ்ரவஶ<br>அப்யத்ரவத் | சென்றான். |
| (_தஶ)<br>(தத்) | அந்த மஹாபூதமான பிர்ம்மமானது |

| | |
|---|---|
| தஸ்மாத் | (இந்திரப்பட்டத்தில்அதிக அபிமான த்தை யுடையவனுகையால் இவனை மிகவும் அவமானப்படுத்தக் கூடா தென்று நினைத்து) இந்திரன் சமீ பத்தில் வருகிறதற் குள்ளாகவே |
| திரோததே | அன்தர்தானத்தை (காணமற் போ கும் ஸ்திதியை) அடைந்தது. |

தாத்பரியம்.

எப்பொழுது அக்கினியினுலேயும், வாயுவினுலே யும் இந்தயக்ஷரூபமான பிர்ம்மத்தின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள முடியாமல் கர்வபங்கமடைந்துத் திரும்பிவந்தவுடன் தேவதைகள், திருலோகபூஜ்ய னை இந்திரனை அழைத்து நீ போய் இப்பெரியபூ தத்தின் சங்கதியைத்தெரிந்து கொண்டுவா வென்ற னுப்ப, இந்திரனும் அப்படியே ஆகட்டுமென்று அப் பெரு உருவந்தரித்த யக்ஷரூபமாகிய பிர்ம்மத்தினி டத்திற்கு வருவதற்குமுந்தியே, அவ்வுருவமான பிர் ம்மமானது இவன் தேவதைகளுக்குப் பூஜ்யமான இந் திரனுகையால் இவனையும் அப்படி அவமானிக்கக்கூ டாதென்று நினைத்து ஆகாயத்தில்மறைந்தது.

---

## பனிரெண்டாவது மந்திரம்.

அவதாரிகை.

இப்படி யக்ஷரூபமான பிர்ம்மமானது மறைந்தவு டன் ஆகாயத்தில் மிகவும்பிரகாசமான ஸ்திரீரூபத்து

டன் காணப்படுகிற உருவத்திற்கும் இந்திரனுக்கும் நடந்த விஷயங்களைப்பற்றி இம்மந்திரம் தெரியச் செய்கிறது. அதாவது:—

**12**

𑌸 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵𑌾𑌕𑌾𑌶𑍇 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌜𑌗𑌾𑌮
𑌬𑌹𑍁𑌶𑍋𑌭𑌮𑌾𑌨𑌾𑌮𑍁𑌮𑌾𑌂
𑌹𑍈𑌮𑌵𑌤𑍀𑌂 𑌤𑌾𑌂 𑌹𑍋𑌵𑌾𑌚
𑌕𑌿𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑌿𑌤𑌿॥ ௧௨॥

ஸதஸ்மிந்நேவாகாஶேஸ்திரியமாஜகாம
பஹுஶோபமாநாமுமாம்।
ஹைமவதீம் தாம் ஹோவாச
கிமேதத்யக்ஷமிதி॥ ௧௨॥

𑌸𑌃 ஸ: (தான் தெரிந்துகொள்ளும் பொருட்டு வந்த அந்தமஹாபூதமான பிர்ம்மமானது காணமற்போன உடனே குருகிப்போனவும் துக்காக்கிருந்தமான மனதையுடைய) அந்த இந்திரன்.

𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍, 𑌏𑌵, 𑌆𑌕𑌾𑌶𑍇 தஸ்மின், ஏவ, ஆகாஶே (காணமற்போன இடமாகிய அவ்வாவாகாசத்தில் அந்த உருவத்தைத் தியானித்துக் கொண்டும், தன்னுடைய இஷ்டதெய்வமும் வித்தியாரூபமான பரமேஶ்வரியைக் குறித்து ஸ்தோத்திரங்களால் துதித்து மனதில் தியானித்துக்கொண்டு அக்கினி வாயுக்களைப்போல தானும்திரும்பிவருகையில்) அந்த ஆகாயத்திலேயே

| | |
|---|---|
| ஹைமவதீம் | (1) தங்கத்தினுல் செய்யப்பட்ட ஆபரணங்களையுடைய, (2) ஹிமோத்கிரியினுடைய குமாரத்தியானது (3) பனிக்கட்டியைப்போல சுவச்சமாயும் நிர்மலமாயும் ஸ்வயம்பிரகாசமாயும் ஆனந்தசொரூபமா யுள்ளதும், |
| பஹு சோபமாநாம் | (அவித்தியா சொரூபமான எல்லாவற்றிற்கும் வேருயும்,) அதிககாந்தியையுடையதும் |
| உமாம் | அவித்தையைப் போக்கடிப்பதினுல் சிரேஷ்டமான பிர்ம்மவித்தியாரூபியுமான |
| ஸ்த்ரியம் | பெண்சொரூபத்தை நோக்கி |
| ஆஜகாம | வந்தான். |
| தாம், ஹ | பிரசித்தமான அந்தப்பெண் சொரூபத்தைப்பார்த்து |
| ஏதத், யக்ஷம் | அக்கினியையும், வாயுவையும் அவமானப்படுத்தி இப்போது (தோன்றி மறைந்துபோன) அந்த மஹாபூத சொரூபம் |
| கிம், இதி | என்ன (எப்படிப்பட்டது) என்று |
| உவாச | கேட்டான். |

### தாத்பரியம்.

தான்வந்தவுடன் மறைந்துபோன அந்தப்பெரிய யக்ஷபூதத்தைக் குறித்து துக்காக்கிருந்தனுகி, அப்பேர்க்கொத்த பெரியவஸ்துவின் சங்கதிதெரியாமற் போயிற்றே, இதுவரைக்குமே அக்கினியும் வாயுவும் அவமானப்பட்டு பின்சென்றூர்களே, அப்பெரியசொரூபம் அவர்களுடன் பேசிற்றே, நம்முடன் அது கூட இல்லையே, நான்தேவதைகளுக்குப்போய் என்ன சொல்லுவேன் என்று மனங்கலங்கி, அப்பெரியசொரூபத்தை ஏக்காக்கிறசித்தனுய்த் தியானித்து, பிற்பாடு தன்னுடைய இஷ்டதேவதையாகிய உமா தேவியை (லெக்ஷ்மியைத்) தியானஞ்செய்துகொண்டுத் திரும்ப எத்தனிக்கையில், வெண்மையான பனியைப் போல மிகவும் சுத்தமாயும், நிர்மலமாயும், ஸ்வயம் பிரகாசமாயும், சதானந்த ஸ்வரூபமாயும், அவத்தியா ஸ்வரூபமான எல்லாவற்றிற்கும் வேறுனதாயும், ஜெகஜ்யோதிஸ்வரூபமாயும், அவித்தையைப் போக்கக்கூடிய சிரேஷ்டமான பிர்ம்மவித்தியா ஸ்வரூபியுமான ஒரு பெண்ரூபத்தை ஆகாசத்தில் இந்திரன்பார்த்து, நமஸ்கரித்து தாயே! அக்கினியையும், வாயுவையும் அவமானஞ்செய்து இப்போது மறைந்துபோன அந்த மஹா பூதஸ்வரூபம் இப்படிப்பட்டதென்று சொல்ல வேண்டுமென்று பிரார்த்தித்தான். பிர்ம்மகீதையில் இது விவரத்தைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது :—

ஐந்த்ரா தீவவிஷ்ணவஸ்ய ஃஹாரா தாவஸம்பிதம்।

விஃப்ராஸ வாஃரம் ஹீயம் தாகாரஸணிகொதுஃ

[illegible]

ஸா ஶிவா கருணாமூர்த்தி: ஜகந்மாதா த்ரயீமயீ।
ஶிவாபிந்நா பராநந்தா ஶங்கரஸ்யாபி ஶங்கரீ।
[illegible] ஹிமவத்புத்ரீ ஸ்வபக்தஜநவத்ஸலா।
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] [தா।

தா|| தான்வந்தவுடன் மறைந்துபோன அந்தமஹாபூத ஸ்வரூபமான பரபிர்ம்மத்தைக்குறித்து இந்திரன் மகாவிசனத்தையும், தாபத்தையு முடையவனுகி அவித்தையைப் போக்கடிக்கக்கூடிய சிரேஷ்டமான கருணையையுடைய வித்தியா ஸ்வரூபியானவும், மூவ்வுலகங்களுக்கும் மாதாவாகவும், மங்களஸ்வரூபமாகிய பரபிர்ம்மத்திற் கபின்னமானதாகவும், சிரேயஸ்ஸுக்களுக்கெல்லாம்சிரேயஸ்ஸாகவும், ஹிமவத்கிரியின் புத்திரியாயும், தன்னைத் தியானிக்கும் பக்தர்களுக்கு பக்தவத்ஸலமாகவும், சகலப்பிராணிகளுக்கும் தெரிந்துகொள்ள முடியாததாயுமிருக்கிற பரபிர்ம்மத்தினுடைய மகிமையை ஸ்வாநுபவத்தினுல் தெரியச்செய்யக் கூடியதாகவும், அம்மகாபூதமான பிர்ம்மமானது தோன்றின இடத்திலேதானுகவே ஆவிற்பவித்ததாக

வும், தேஜோமயமானதுயான உமாதேவியைத் தியானித்து, ஆவிற்பவித்தவுடன் பிரார்த்தித்து ஓ பரமேஸ்வரீ! இதுவரைக்கும் தோன்றி நின்று இப்போது மறைந்துபோன அந்தப் பெரியபூதத்தினுடைய விவரத்தை எனக்குத் தெரியச்சொல்லவேண்டுமென்று கருணாநிதியான தேவியை வணங்கிக் கேட்டுக்கொண்டான், என்று பிர்ம்ம கீதையிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

சாமவேதத்தின் தலவகாரோபநிஷத்தென்கிற
கேநோபநிஷத்தின்
மூன்றாவதுகண்டம்-முற்றிற்று.

---

ஓம்தத்ஸத்.

ஓம் தத் ஸத்.

ஸ்ரீ ஹயவதனம் கலைச.

---

# நான்காவது கண்டம்.

## முதலாவது மந்திரம்.

அவதாரிகை.

இந்திரன் லக்ஷிமியாகிய உமாதேவியைத் தியானித்து பிரத்தியக்ஷமானவுடன் உமாதேவியை, இப்போது காணப்பட்டு மறைந்துபோன மகா பூதத்தின் வரலாற்றைபற்றிச் சொல்லவேண்டுமென்று கேட்டு கொண்டதற்கு பிரத்தி யுத்தரத்தை இந்த மந்திரம் தெரிவிக்கிறது, அதாவது:—

1.

𑌶𑍍𑌰𑍁॥ 𑌸𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌾 𑌏𑌤
𑌦𑍍𑌵𑌿𑌜𑌯𑍇 𑌮𑌹𑍀𑌯𑌧𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌤𑌤𑍋 𑌹𑍈𑌵 𑌵𑌿𑌦𑌾𑌞𑍍
𑌚𑌕𑌾𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿॥ க॥

சுரு॥ ஸாபிர்ம்மேதிஹோவாச பிர்ம்மணோவா ஏதத்விஜயே மஹீயத்வமிதிததோஹைவ விதாஞ்சகாரபிர்ம்மேதி॥ க॥

| | |
|---|---|
| ஸா<br>ஸா | ஸ்திரீரூபமாகக் காணப்படுகிற வித்யா ஸ்வரூபமாகிற பார்வதியாகிய லக்ஷிமி |
| ப்ரஹ்ம, இதி<br>பிர்ம்ம, இதி | (தோன்றி மறைந்ததாகச் சொல்லுகிறாயே ஓ இந்திரா! அது) பிர்ம்ம ஸ்வரூபமாக்கும் என்று |
| உவாச,ஹ<br>உவாச,ஹ | (பிர்ம்மவித்தியா ஸ்வரூபியான தேவியானவள்) சொன்னாள், |

| | |
|---|---|
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃, 𑌵𑌾<br>பிர்ம்மணஃ, வா | பிர்ம்மத்தினுடையதாகவே இருக்கிற |
| 𑌏𑌤𑌤𑍍, 𑌵𑌿𑌜𑌯𑍇<br>ஏதத், விஜயே | முன்சொன்ன அசுரஜெயத்தில் |
| (𑌯𑍂𑌯𑌂)<br>(யூயம்) | நீங்கள் |
| 𑌮𑌹𑍀𑌯𑌧𑍍𑌵𑌮𑍍<br>மஹீயத்வம் | (நிமித்த மாத்திரமாகயிருந்து) மகிமையை யடைந்தீர்கள். (ஆகையால் இச்செயம் உங்களுடையதாக எண்ணி கர்விக்கவாவது மித்தியாபிமானத்தை யுடைத்தாக வாவதிருக்க வேண்டாம்.) |
| 𑌇𑌤𑌿<br>இதி | இவ்விதமாக |
| (𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃)<br>(இந்த்ரஃ) | இந்திரன் |
| 𑌤𑌤𑌃, 𑌏𑌵<br>ததஃ, ஏவ | அந்த உமாதேவியின் வசனங்களினுலேயே |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮, 𑌇𑌤𑌿<br>பிர்ம்ம, இதி | (தோன்றிமறைந்த அந்த யக்ஷஸ்வரூபம்) பிர்ம்மமேயென்று |
| 𑌵𑌿𑌦𑌾𑌞𑍍𑌚𑌕𑌾𑌰<br>விதாஞ்சகார | தெரிந்துகொண்டான். |

தாத்பரியம்.

ஆகாயத்தில் ஸ்திரீரூபமாகக் காணப்பட்ட மகாலக்ஷிமி ஸ்வரூபமான உமாதேவியானவள், தன்னைக்குறித்து ஸ்தோத்திரஞ் செய்துகொண்டும், தோன்றி மறைந்துபோன அந்த மஹாபூதத்தின் விவரத்தைத் தெரிந்துகொள்ள ஆஸக்தி யுடையவனுயு மிருக்

கிற இந்திரனைப்பார்த்து ஓ இந்திரா! நீ பார்த்துக் கொண்டிருக்கும் போதே மறைந்துபோன அந்த பெரிய ஸ்வரூபமானது பரபிர்ம்மமாக்கும். தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் நடந்த யுத்தத்தில் தேவதைகள் நிமித்த மாத்திர மாகவே இருந்தார்களேயல்லாமல் ஜெயமெல்லாம் பிர்ம்மத்தி னுடையதே. அதைத் தெரிந்துகொள்ளாமல் தேவதைகள் அச்செயங்களை தங்களுடையதாக எண்ணி கர்வித்திருந்தபடியால் அக்கர்வத்தைப்போக்கி பிர்ம்ம ஸ்வரூபபரிஞான முண்டாகும்படி செய்வதற்காகத் தோன்றிற்று. அப்போது தேவதைகள் அநுப்பிய அக்கினியும் வாயுவும் தங்களுடைய கர்வபங்கமாகியும் பரபிர்ம்மத்தைத்தெரிந்து கொள்ளாமற் போனபடியால் அவர்களுக்கெல்லாம் தேவராட்டாகிய உன்னைக்கொண்டு அந்தப் பரபிர்ம்ம ஸ்வரூபத்தை அவர்களுக்குச்சொல்லி, ஜயவிஷயமாக உண்டான சகல மகிமைகளும் அந்தப் பரபிர்ம்மத்தினுடையவைகளே யல்லாது அந்த தேவதைகளி னுடைய தல்லவென்பதை அநுபவமாகக் காட்டும் பொருட்டாகவே, கர்வித்திருந்த அக்கினிக்கும் வாயுவுக்கும் எதிரில் ஒரு துரும்பைபோட்டு அவர்களுடைய எல்லாச் சக்திகளாலும் அதை அசைக்க முடியாமற் போகும்படிசெய்தது. ஆகையால் பிரபஞ்சத்தின் கண்ணுள்ள எல்லாவற்றின் சக்திகளும் பரபிர்ம்மத்தின் சக்தியேயல்லாது வேறில்லை. நம்முடைய தென்று நினைப்போமேயாகில் அக்கினியும், வாயும்போல அவமானப் படுவோமேயல்லாமல், நாம் நினைத்தபடி முடிக்க முடியாது. ஆகையால் நாம் செய்யும் எல்லாச் செய்கைகளையும்

அந்தப்பர பிர்ம்மத்தினுடையதே யென்றும், அச்செய்கைகளா லுண்டாகும் சுகதுக்கங்களும் நம்முடைய தல்லவென் றிருப்போர்களுக்கே அப்பரபிர்ம்ம ஸ்வரூபாநுபவ முண்டாகுமென்றும் தேவிசொன்ன வாக்கியங்களை இந்திரன் தெரிந்துகொண்டான்.

## இரண்டாவது மந்திரம்.

### அவதாரிகை.

இந்திரன் லக்ஷிமிதேவியின் மூலமாய் பரபிர்ம்மத்தைக்குறித்துத் தெரிந்துகொண்ட பிற்பாடு நடந்த சங்கதிகளைப்பற்றி இம்மந்திரஞ் சொல்லுகிறது.

2

𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌤𑌿𑌤𑌰𑌾𑌮𑌿𑌵𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑍍
𑌦𑍇𑌵𑌾𑌨𑍍 𑌯𑌦𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌯𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑍇𑌨𑌨𑍍𑌨𑍇𑌦𑌿
𑌷𑍍𑌠𑌂 𑌪𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍁𑌸𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑍇𑌨𑌤𑍍𑌪𑍍𑌰𑌥𑌮𑍋 𑌵𑌿𑌦𑌾
𑌞𑍍𑌚𑌕𑌾𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿॥ ௨॥

சுரு|| தஸ்மாத்வா ஏதேதேவா அதிதரா மிவாந்யான் தேவான் யதக்நிர்வாயு ரிந்த்ரஸ்தேஹ்யே நன்னேதிஷ்டம் பஸ்ப்ருஶுஸ்தேஹ்யேநத் ப்ரதமோவிதாஞ்சகார பிர்ம்மேதி||

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍, வா
தஸ்மாத், வா

(அக்கினியும், வாயுவும் பிர்ம்மத்திற்குச் சமீபத்தில்போய் சம்பாஷித்த கௌரவத்தை யடைந்தார்கள்; இந்திரனும் லக்ஷிமி தேவியின் வாக்கியத்தினல் பிர்ம்ம நிர்ணயத்தைத் தெரிந்து கொண்டான்;) அந்தக் காரணத்தினலேயே

| | |
|---|---|
| ஸதெ, தெவாஃ<br>ஏதே, தேவாஃ | இந்த அக்கினி, வாயு, இந்திரன் முதலான தேவதைகள் |
| அந்யாந், தெவாந்<br>அந்யாந், தேவாந் | இதர தேவதைகளை |
| அதிதராம், இவ<br>அதிதராம், இவ | சக்தி, குணம், ஐச்சுரியம் முதலியவைகளினால் அதிக்கிரமித் தவர்களைப் போல இருக்கிறார்கள். |
| யத்<br>யத் | எந்தக் காரணத்தினால் |
| அக்நிஃ<br>அக்னிஃ | அக்கினியும் |
| வாயுஃ<br>வாயுஃ | வாயுவும் |
| இந்த்ரஃ<br>இந்த்ரஃ | இந்திரனும் |
| ஏநத்<br>ஏநத் | இந்தப் பிர்ம்மத்தினுடைய |
| நேதிஷ்டம்<br>நேதிஷ்டம் | அதிக சமீபத்தை |
| பஸ்ப்ருஶுஃ<br>பஸ்ப்ருஶுஃ | நன்றாய் உத்திரப்பிரத்தி யுத்தரங்களினால் ஸ்பர்சித்தார்களோ, |
| தெ, இந்த்ராதயோஹி<br>தே, இந்த்ராதயோஹி | (அந்தக் காரணத்தினால்) அந்த இந்திராதியர்களே |
| ஏநத்<br>ஏநத் | இந்த யக்ஷரூபந் தரித்திருந்த பிர்ம்ம ஸ்வரூபத்தை |

